உ

# பழநி ஆண்டவர்

## ஸ்தல வரலாறு.



BY

**N. K. M. SHERIFF,**

(Awarded Gold Medal by Sivaji Maharaja of Tanjore in 1925.)

SON OF

N. KADAR MOHIDEEN MASTHAN, PALNI.

Price As.



உ
சிவமயம்.

# பழநி ஆண்டவர் ஸ்தல வரலாறு.



ஆக்கியோன் : பழநி செந்தமிழ் வித்வான்
N. காதர் முகையதீன் மஸ்தான் அவர்கள் குமாரன்
**N. K. M. ஷரீப் அவர்களால்**
அநேக புராணங்களை ஆராய்ச்சி செய்து வெளியிடப்பட்டது.

15-வது பதிப்பு.

உ

ஸ்ரீ முருகன் துணை.

# முகவுரை.

பரம புண்ணிய பூமியாகிய இப் பரதகண்டத்திலே இறைவன் அருள் விளக்கம் பெற்ற க்ஷேத்திரங்கள் மிகப் பல. அவற்றினுள் தென்மைச் சேரனும், தென்னவனாகிய பாண்டியனும் ஒன்று போற்றிய கொங்கு வைகாவூர் நன்னாட்டு பழநி ஸ்தலமாகப்பட்டது மிக்க விசேடமும், பெருமையும் உடையது.

இது ஸ்ரீ முருகக் கடவுள் திருவிளையாடல்கள் நிறைந்துள்ள ஆறுபடை வீடுகளில் மூன்ருவது படைவீடாகிய **திருவாவினன்குடி** என்னும் மகாமகத்துவம் பொருந்தியது. எத்தேசகாலமும் வெளியூர்களிலிருந்து ஏராளமான பக்தர்கள் ஸ்ரீ பழநி ஆண்டவரை நாடி அரோஹரா, அரோஹராவென்ற கோஷத்துடன் இரவும், பகலும் வந்து தரிசித்துக்கொண்டு வருவது இப் பூவுலகெங்கும் நன்கு அறிந்த விஷயமேயாகும்.

ஆனல், ஸ்ரீ பழநியாண்டவர் தரிசனார்த்தமாக பழநி ஸ்தலத்திற்கு வரும் பக்தகோடிகள் பழநி க்ஷேத்திரத்தின் பெருமைகளையும், கோவிலின் சிறப்புகளையும், ஸ்தலத்தின் விசேஷங்களையும் நன்கு அறியும் பொருட்டு இச்சிறு புத்தகமாகிய ஒன்றை அடியேன் சிற்றறிவுக்கு எட்டியவரை எழுதி முடித்து இதற்கு நாமதேயம் "**பழநி ஆண்டவர் ஸ்தல வரலாறு**" என்ற பெயர் சூட்டி அச்சிட்டு, வெளியிட்டுள்ளேன். அன்பினல் அடியேன் வெளியிட்ட இந்நூலின் கண்ணுள்ள குற்றம் குறைகளை அறிஞர்கள் பொறுத்தருள்வார்களாக.

இங்ஙனம்,

**N. K. M. ஷரீப்.**



உ

மகா மகத்துவம் பொருந்திய பழநித்தலம்

# பழநி ஆண்டவர் ஸ்தல வரலாறு.

## 1. பக்தஜனங்கள் கவனிக்கவேண்டிய விஷயம்.

பழநி ஆண்டவர் தெரிசனார்த்தமாக பழநி ஸ்தலத்திற்கு வரும் எல்லா பக்த ஜனங்களும் பழநி ரயில்வே ஸ்டேஷனுக்கு நேர் பழநிமலை அடிவாரம் வந்து சேரவேண்டும். சேர்ந்தவுடனே தங்களுக்கு சௌகரியப்பட்ட சத்திரங்கள் ஒன்றில் தங்கி, தங்கள் தங்கள் சாமான்களை பந்தோபஸ்து செய்துகொள்ளவேண்டும். இரண்டாவது தங்களுக்கு முன் அறிமுகமுள்ள குருக்கள், பண்டாரங்கள் இருந்தால் அவர்களுக்கு தாங்கள் வந்திருக்கும் விபரங்களை தெரியப்படுத்தி தங்கள் பிரார்த்தனை கைங்கர்யங்களை பழநி ஆண்டவருக்கு செலுத்தி பிரசாதமும், கோரிய வரங்களும் பெற்று, என்னாளும் நன்னாளாய் சுக க்ஷேமத்துடன் வாழ்ந்து வரும்படி வேண்டுகிறோம்

## 2. பழநி ஸ்தல சிறப்பு.

நீர்வளமும், நிலவளமும் பொருந்திய பழநி க்ஷேத்திரத்தின் அழகும், மலையின் வட்டவடிவும், மலைமேல் உள்ள கோவிலின் சிறப்பும், புதிய படிக்கட்டுகளின் அமைப்பும், பக்தர்கள் இளைப்பாறுவதற்கு தங்கும் வசந்த மண்டபங்களும், அழகிய இராய கோபுரமும், புகழ்ச்சிபெற்ற புண்ணிய தீர்த்தங்களும் நிறைந்து பக்தர்கள் மனதை பரவசப்படுத்தி இன்புறச் செய்யும்.

பழநிமலையாகப்பட்டது இவ்வூரின் நிலப்பரப்பிற்குமேல் சுமார் 450-அடி உயரமுள்ளது. இதன் பரப்பு சுமார் 99 ஏக்கர். இதன் உச்சியில்தான் ஸ்ரீ முருகக் கடவுள் கோவில்கொண்டெழுந்தருளியுள்ளார். சங்க காலத்தை ஒட்டிய தமிழகத்தில் மூவேந்தர்களாகிய பாண்டியர், சோழர், சேரர்களாலும் 12, 13, 14-ம் நூற்றாண்டுகளில் பிற்கால சோழர்கள், பாண்

டியர்களாலும் அதற்குப்பின் 15, 16, 17-ம் நூற்றாண்டுகளில் விஜயநகர ஆட்சியின்கீழ் மதுரை நாயக்க மன்னர்களாலும் இம் மலைப்பகுதியும் இதனைச் சார்ந்த நாடுகளும் ஆளப்பெற்று வந்தன.

18-ம் நூற்றாண்டிலே இந்நிலப்பகுதி மைசூர் ஆட்சிக்குட் பட்டு நான்காவது மைசூர் போருக்குப் பிறகு கி. பி. 1792-ம் ஆண்டிலே கிழக்கிந்திய கம்பெனியராகிய ஆங்கிலேயர் அரசாட்சி யின்கீழும் இருந்துள்ளது. சென்ற பலகாலமாக கோவை ஜில் லாவின் ஒரு பகுதியாகிய ஐயன்புள்ளித் தாலூகாவில் அடங்கி யும் சுமார் 65 ஆண்டுகளாக மதுரை ஜில்லாவில் சேர்க்கப்பெற்று பழநித் தாலூகாவாக தலைசிறந்து விளங்குகிறது. பழநி 1886-ம் ஆண்டுமுதல் நகராண்மைக்கழக ஆட்சி முறையைப் பெற்று திகழ்கின்றது. இவ்வூரின் ஜனத்தொகை 47500. இங்கு பல இடங்களில் ஒவ்வொரு ஜாதியினர்களும் தங்கள் தங்கள் இனத் தார்களுக்கென கட்டி வைத்துள்ள பெரிய தர்மச் சத்திரங் களும் மலை அடிவாரத்தில் அன்பர்கள் சமீபத்தில் கட்டிவைத் துள்ள பல அறச்சாலைகளும் இருக்கின்றன. ஆங்கு வெளியூர் அன்பர்கள் கட்டணமின்றித் தங்குவதற்கு வேண்டிய வசதிக ளும் செய்யப்பட்டுள்ளன.

1928-ம் ஆண்டில்தான் பழநிக்கு தென்னிந்திய ரெயில்வே இருப்புப்பாதை திண்டுக்கல்லுடன் இணைக்கப்பட்டது. திண்டுக் கல்லிலிருந்து வடமேற்கில் 36 மைல் தூரத்தில் பழநித்தலமும், போத்தனூர் செல்லும் இக்கிளை இருப்புப்பாதை உடுமலைப் பேட்டை பொள்ளாச்சி மார்க்கமாக கோயமுத்தூருக்கும், மற் றொன்று பாலக்காட்டிற்கும் சென்று சேர்கிறது. பழநி 1937-ம் ஆண்டில்தான் பைக்காரா மின்சார வசதிகளையும், 1931-ம் ஆண்டில் கொடைக்கானல் மலைத்தொடரின் அடிவாரத்தில் தேக் கப்பட்ட குடிதண்ணீர் வசதியையும் பெற்றுள்ளது.

எத்தேசகாலமும் வெளியூர்களிலிருந்து ஏராளமான பக்த கோடிகள் பழநி க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து முருகனை வழி பட்டு முடி எடுத்து, புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து

பிரார்த்தனைப்படி பலவித காவடிகள் கட்டி மலைக்குப்போய் பழநி ஆண்டவரைக் கண்டு தெரிசித்து பலவித அபிஷேகங்களும், அர்ச்சனைகளும், ஆராதனைகளும் செய்து ஆண்டவனது அருட் பெரும் வரப்பிரசாதங்களும் பெற்று ஆனந்தித்து வாழ்ந்துவரு கின்றனர்.

## 3. பழநி என்ற நாமதேயம் ஏற்பட்ட வரலாறு.

முன் காலத்தில் பிரமதேவரிடம் நாரத முனிவர் சென்று வீணை வாசித்து அரிய பெரிய சங்கீதங்கள் அதாவது பண்ணல், பரிவட்டனை, ஆராயுதல், தைவால், செலவு, விளையாட்டு, கையூள், குறும்போக்கு என்னும் எட்டுக்கலை தொனிகளாலும் இசை பாடி, இன்பமுறும்படி செய்தார். சபையில் உள்ளவர்களும், பிர மதேவரும் சங்கீத இசையைக் கேட்டு ஆனந்தித்து அதற்குப் பரி சாக பிரமதேவர் ஒரு மாதுளங்கனியை நாரதமுனிவருக்குக் கொடுத்தார். அதை முனிவர் அன்புடன் வாங்கிப்பார்த்து நவரத்தினம்போன்ற இம்மாதுளங்கனி எல்லாம்வல்ல ஈஸ்வர னுக்கே தகும் என்று உடனே கைலயங்கிரிக்குச் சென்று சிவ பிரானைக் கண்டு வணங்கி மேற்படி மாதுளங் கனியை பரமன் கையில் கொடுத்துவிட்டுச் சென்றார். அதுசமயம் கனியை கண் களால் கண்ட விநாயகரும், சுப்பிரமணியரும் ஒருவருக்கொருவர் எனக்கு உனக்கு என்று ஈஸ்வரனிடம் வாதாடினர்.

அதுகண்ட பரமேஸ்வரனும், பார்வதியும் ஒரு திருவிளை யாடல் செய்யக் கருதி, மேல்கண்ட இரு குழந்தைகளையும் அழைத்து நீங்கள் இருவர்களும் புறப்பட்டு இவ்வுலகை ஒரு நொடிக்குள் சுற்றி யார் முதலில் என் முன் வந்து நிற்கின்றீர் களோ அவர்களுக்குத்தான் இந்த மாதுளங்கனி உரிமை; அவனே தேவர் யாவரினும் பெரியோன்; அவனே பரப்பிரம்மம் என்று தேவர் முதலிய பதினெண் கணத்தவர்களுடைய சபை யிலே பேசி தீர்மானித்து உத்திரவு செய்தார். அதற்கு விஷ்ணு முதலிய தேவர்கள் தம்மால் இயலாது என்று இருந்துவிட் டனர். தேவர்களுக்கு நேர்ந்த கதியை அறுக்கவும், சர்வலோகங்

களையும் ஓர் நொடிப்பொழுதில் சுற்றி வலம் வரவும், இவ்வுலகின்கண் உள்ள எல்லாவற்றையும் அறியவும். படைக்கவும், காக்கவும், அழிக்கவும், மறைக்கவும், அருளவும் வல்லவர் முருகக் கடவுளே ஆவர் என்று எல்லோர்களும் பேசி அவ்விடமே அமர்ந்தருளினர். அதுசமயம் சிவபெருமானுடைய உத்திரவின் படி சுப்பிரமணியக் கடவுள் தமது பசிய மயில்வாகனத்தின்மீது அமர்ந்து விரைவிற் சென்று வாயுவேகம், மனோவேகம் என்று சொல்லப்படும் வேகங்களுக்கு மேலே அதலம், விதலம், சுதலம், நிசாதலம், தராதலம், இரசாதலம், பாதலம் என்னும் ஏழு உலகங்களையும் கடந்து, அவற்றிற்கு மேல் எட்டிலக்கம் யோசனை தூரமுடைய கனிட்டம் என்னும் எட்டாவது பாதலத்தையும், பூமியின் கண்ணுள்ள சத்ததீவம், கடல், மலைகள் முதலியவைகளையும், மேகம், வாயு, சூரியன், சந்திரன், நட்சத்திர மண்டலங்களையும் துருவ நக்ஷத்திரமுள்ள புவர்லோகம், இந்திரன் வாழும் சுவர்க்கலோகம், மார்க்கண்டேயர் முதலாம் இருடிகள் வசிக்கும் சனலோகம், பிதிரர் வாழும் தவலோகம் சனகாதியர் தவம்புரியும் மகாலோகம் விதிபோன் வீற்றிருக்கும் சத்தியலோகம் முண்டகண்ணன் அண்டியிருக்கும் வைகுண்ட லோகம் முதலிய லோகங்களையெல்லாம் இங்ஙனமே சுற்றி பிரமாண்டங்களையும் பிருதிவி அண்டத்துள்ள ஆயிரங்கோடி அண்டங்களையும், அப்பு அண்டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாய அண்டம், தன்மாத்திராண்டம், அகங்காரபுவனம் முதலாக நாதமீறுய் உள்ள உலகங்களான பஞ்ச கலைகளுக்குமுட்பட்ட மந்திரம், பதம், வண்ணம், தத்துவம், புவனம் என்று சொல்லப்பட்ட பிரபஞ்சங்களையெல்லாம் ஒரு நொடிக்குள் சுற்றிக் கொண்டு திருக்கயிலையை நோக்கிப் புறப்பட்டு வந்தார். அப்போது தொந்தி வயிற்றையுடைய விநாயகர் தான் உலகம் வலம் வர யோசித்து, ஈசன் வேறு உலகம் வேறோ, என்ற உண்மை உணர்ந்து தமது தாய் தந்தைகளான லோகோற்ப மூலப் பரம் பொருளாகிய பரமசிவத்தையும், பராசத்தியையும் சுற்றி வலம் வந்து உங்கள் இருவரையும் சுற்றி வலம் வந்தது இவ்வுலகைச் சுற்றி வலம் வந்ததுபோல் ஆகும் என்ற உண்மையை எடுத்துக்

காட்டி, இரு திருக்கரத்தையும் ஏந்தி நின்றார். அப்போது சிவபெருமான் உண்மை என்று உணர்ந்து அம்மாதுளங் கனியை விநாயகருக்கே கொடுத்துவிட்டார்.

பின்பு, சுப்பிரமணியமோ சர்வலோகங்களையும் ஒரு நொடிக்குள் சுற்றி வந்து திருக்கைலைமலை அடைந்து, அங்கு விநாயகர் மாதுளங்கனி தின்பதைக் கண்டு மனம் வெறுப்புக்கொண்டு கோபமாய் மயிலை விடுத்து மகுடம், குண்டலம், பொன்னுடை முதலிய ஆபரணங்களை எல்லாம் கழற்றி எறிந்துவிட்டு, தண்டாயுதம் ஒன்று கையிலேந்தி கௌபீனமணிந்து திருக்கயிலையினின்றும் புறப்பட்டு, தென்திசை நோக்கி தேவகிரி அடைந்து அங்கே தம்மை நோக்கித் தவம் புரிந்துகொண்டிருந்த முனிவர்கள், தேவர்கள் எல்லோர்களுக்கும் கோரிய வரங்களைக் கொடுத்துவிட்டு வைகா ஊரிலுள்ள திருவாவினன்குடிக்கு வந்து தம்மை பூஜித்துக்கொண்டிருந்த இலக்குமி, சூரியன், காமதேனு, பூமிதேவி, அக்கினி முதலியவர்களுக்கு கோரிய வரங்களைக் கொடுத்து அவ்விடமே அமர்ந்தருளினார். அப்போது ஈஸ்வரனும், ஈஸ்வரியும் தமது செல்வக் குழந்தை சுப்ரமண்யம் மாதுளங்கனியினால் கோபித்துக்கொண்டு போய்விட்டதை அறிந்து மனம் பதைத்து பலவிடங்களிலும் தேடி கடைசியாய் திருவாவினன்குடிக்கு வந்து இளங் குமரனைக் கண்டார்கள். அதுசமயம், குழந்தைவேல் தமது தாய் தந்தை இருவரையும் கண்டு நமஸ்கரித்து மௌனமாய் நின்றார். அப்போது சிவபெருமான் உள்ளம் பூரித்து இரு திருக்கரங்களாலும் சுப்பிரமண்யக் குழந்தையைத் தூக்கி முத்தமிட்டுத் தழுவி பார்வதிதேவியார் கையில் கொடுத்தார். பார்வதியம்மையார் அன்போடு குழந்தை ஷண்முகனை வாங்கி மார்போடணைத்து முத்தமிட்டுத் தழுவி மடியிலிருத்தி மனம் பூரித்து பராசக்தி வேலையும் கையில் கொடுத்து மீண்டும் ஈஸ்வரன் கையில் கொடுத்தார். ஈஸ்வரன் சுப்பிரமணியக் குழந்தையை வாங்கி, அப்பா குழந்தாய்! நீயே ஒரு பழம் ஆனதால் உன்னை விட வேறு பழமும் உண்டோ? இல்லை இல்லை. ஆனதால் பழம் நீயப்பா "பழம் நீ" என்று பலவாறு புகழவே, அன்றைய நாள்தொட்டு இப் பழநி க்ஷேத்திரத்திற்குப் "பழநி" என்ற நாமதேயம் உண்டாயிற்று என்று பற்பல புராணங்கள் கூறுகின்

றன. சுவாமியும் பழநியாண்டவன் எனவும், தண்டாயுதபாணி என்றும், ஞானப்பழமூர்த்தி எனவும் பெயர் பெற்ற காரணத்தினுல் ஆண்டவருக்கு தினசரி பழம் கலந்த பஞ்சாமிர்த அபிஷேகம் சதா நடைபெற்றுவருவதே இதற்கு அத்தாட்சியாகும்.

### விருத்தம்.

கந்தா வருக உலகமெலாங் கணத்திற் புடைபோய் வந்தவொரு
காரே வருக மாதுள நற்கனிக்குப் பிரிந்தோய் வருக வருக
மேந்தாய் வருக வேள் வருக வினியோய் வருக வெவ்வுயிர்க்கு
மேந்தால் வருக வண்டதர வேறே வருக நங்கடிரு
மைந்தா வருக சிவகிரிநேர் வாழ்வே வருக வின்பமுள
வணியே யணியே வருக நலம் வந்தாய் வருகவருள் சுரக்குஞ்
சிந்தே வருக ஆவினன்குடியிற் றிருவே வருக வருகவே
தேவே ஞானப் பழநீ நீவா செல்வா வருக வருகவே.

### 4. சிவகிரி என்ற பழநி மலையும், சத்திகிரி என்கின்ற இடும்பன் மலையும் பழநிக்கு வந்த வரலாறு.

செந்தமிழ் ஆசிரியராகிய அகத்திய முனிவர் கந்தமலைகளுள் மிகச் சிறந்த சத்திகிரி, சிவகிரி என்னும் இரண்டு மலைகளையும் சத்தி சிவமாகப் பாவித்து முருகக் கடவுளின் உத்திரவின்படி, அவற்றைபொதிகை மலைக்குக் கொண்டுவந்து, பூஜிக்க நினைத்து மேல்கண்ட மலைகளைப் பெயர்த்துக்கொண்டு பூவுலகின்கண் வந்தார். பூர்ச்சவனம் என்னும் தலம் வந்து சேர்ந்ததும், முருகவேளின் திருவருளாலே அம்மலைகள் இரண்டையும் அவ்விடம் வைத்துவிட்டு பொதிகையை நோக்கி புறப்படலாயினர்.

சூரபன்மன், சிங்கமுகன் தாரகன் என்னும் அசுரர்களின் சேனைகளுக்கும், அக் குலத்திலுதித்த எல்லோருக்கும் வில் வித்தை, வாள் வித்தை முதலியவைகள் கற்றுக்கொடுக்கும் வலிமையையுடைய இடும்பாசுரன் என்னும் இராட்சதன் முருகக் கடவுளின் சம்காரத்திற்கு அகப்படாமல் உயிர் தப்பித்துக்

கொண்டான். மற்றைய சூரபத்மர்களும், அசுர சேனைகளும் சுப்பிரமணியக் கடவுளுடைய வேலாயுதத்தால் வேருடன் அழிக்கப்பட்டு அவர்கள் எல்லோரும் அழிந்தமையால் இடும்பாசுரன் தன் மனைவி இடும்பியுடன் புறப்பட்டு மகேந்திரபுரியை விட்டு, வனத்தின் வழியாகச் சென்றான்.

அவ்வாறு செல்லுகையில் திருக் குற்றாலத்திற்கு சமீபத்திலே எதிர்ப்பட்டுள்ள அகத்திய முனிவரைக் கண்டு அடிவணங்கி தம்முடைய வரலாறு கூறி, சுவாமி! நாயினும் கடையேனாகிய அடியேனை ஆட்கொண்டருளவேண்டுமென்று அடிபணிந்து நின்றான்.

அப்போது அகத்திய முனிவர் அவ்வாறே இடும்பாசுரனை ஆட்கொண்டு ஒன்று கூறலாயினர். எனதன்பனே! நீ அதி சீக்கிரம் விரைவிற் சென்று திருக்கேதார தலத்திற்கு சமீபத்தில் பூர்ச்சவனத்திலே இரண்டு மலைக்குன்றுகள் இருக்கின்றன. அவற்றில் சங்கரகரணி, சல்லியகரணி சமனியகரணி, அமிர்தசஞ்சீவினி என்னும் நான்கு மகாமூலிகைகள் விளைந்திருக்கின்றன. அவற்றைப் பிடுங்கி நமது பொதிகைமலைக்குக் கொண்டுவரவேண்டும் என்றும், அதனால் நீ அதிக மேன்மையும், புகழும் கீர்த்தியும் பெறுவாய் என்றும் உத்திரவு செய்து அதற்குரிய மூலமந்திரமும், வழிபாடும் உபதேசித்து அனுப்பிவைத்தார்.

இடும்பாசுரன் அகத்திய முனிவருடைய உத்திரவை சிரமேற்கொண்டு அடிபணிந்து உபதேசம் பெற்று, மனைவியாகிய இடும்பி என்பவளால் கொடுக்கப்பட்ட காய்கனி கிழங்குகளை கட்டமுதாக கட்டி பெற்றுக்கொண்டு முனிவர் தெரிவித்த வழியாகச் சென்று ஆங்காங்கு எதிர்ப்பட்டுள்ள தலங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு, முடிவில் பூர்ச்சவனத்தை அடைந்தான். அரிய பெரிய இரண்டு மலைக்குன்றுகளையும் கண்டான். மனம் அதிக சந்தோஷங்கொண்டு தன்னைத்தானே புகழ்ந்துகொண்டும் தான் செய்த தவம் இப்பூவுலகில் பெரும் தவம் என்றும் புகழ்ந்து அளவிலா ஆனந்தங்கொண்டு அகத்திய முனிவரால் சொல்லி அனுப்பப்பட்ட மகா மூலிகைகளை மறந்துவிட்டு மதி

மயங்கி நின்றான். இடும்பாசுரன் அதிக நேரம்வரை யோசித்துப் பார்த்தும் மூலிகைகள் ஞாபகத்திற்கு வராமையால் நாம் இனி யோசிப்பதில் யாதொரு பிரயோசனமும் இல்லை, இந்த மலைகள் இரண்டையும் எடுத்துக்கொண்டுபோய் நமது அகத்திய முனிவர் முன்புறம் வைத்துவிட்டால் அவருக்கு வேண்டிய மூலிகைகளை எடுத்துக்கொள்ளட்டும் என்று முடிவு செய்து உடனே இடும்பாசுரன் அம்மலைகள் இரண்டையும் பூஜித்து அகத்திய முனிவருடைய உபதேச மூலமந்திரத்தை ஜெபிக்கவே பிரமதண்டம் புயதண்டாகவும், அட்டதிக்கு நாகம் கயிராகவும் தமது முன்புறம் வந்து அமர்ந்தது கண்டு அதிசயித்து இரு கைகளும் குவித்து இரு மலைகளையும் பாம்புகளால் உறிபோலச் செய்து தம் வசப்படுத்தி பிரமதண்டுடன் பிணித்துக் கட்டி இரு கரங்களாலும் முழங்கால் மண்டியிட்டுத் தூக்கி மேகம்போல் எழுந்து காவடியாகத் தோளில் வைத்துச் சுமந்துகொண்டு விந்தியமலை வழியாகச் சென்று மல்லிகார்ச்சுனம். திருக்காளத்தி, திருவண்ணாமலை விருத்தாசலம் புட்பகிரி என்னும் ஸ்தலம் வழியாகச் சென்று பொதிகை மலையை நோக்கிப் புறப்பட்டு வந்தான்.

வரும்பொழுது ஸ்ரீ முருகக்கடவுள் திருவிளையாட்டால் இடும்பாசுரனுக்கு வழிதெரியாமல் திகைத்து பிரமித்து யோசித்து நின்றான். அதுசமயம், சுப்பிரமணியக் கடவுள் ஒரு அரசகுமாரன் வடிவுகொண்டு இடும்பாசுரன் எதிர்சென்று, அப்பா இராட்சதா உன்னைப் பார்த்தால் ஒரு சூரபத்மனைப் போல் இருக்கிறது. அன்றியும், தோளில் இரண்டு மலைகளையும் சுமந்துகொண்டு நிற்கின்றாய் காரணம் யாது என்று கேட்டார். அதற்கு இடும்பாசுரன் தனது உண்மையான வரலாறு கூறி வந்த விபரமும் வழி தெரியாமல் நிற்கும் விபரமும் வெகு வணக்கமாய் எடுத்துக் கூறினான். அதற்கு அரசகுமாரன்போல் நின்ற முருகக் கடவுள் அப்பா இராட்சதா நீ பொதிகைமலைக்குப் போய்ச் சேரவேண்டுமானால் இங்கு சமீபத்திலேயுள்ள வராகமலை வழியாகச் சென்று அவ்விடம் தங்கி பசி தீர்த்துக்கொண்டும், கை கால்கள் இளைப்பாற்றிக்கொண்டும் அதற்குப் பின்பு, நீ பொதிகைமலையை அடையலாம் என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

இடும்பாசுரன் மனம் மகிழ்ந்து உள்ளம் பூரித்து, அவ்விடத்திலிருந்து புறப்பட்டு வராகமலை அடைந்து வடக்கு பக்கத்திலுள்ள **திருவாவினன்குடி** யென்னும் பழநித் தலத்தை அடைந்தான். உடனே இடும்பாசுரனுக்கு தோள் காவடிகள் கனத்து மெய்மறந்து கைகால்கள் சோர்வடைந்து மிகுந்த தண்ணீர் தாகமும், பசியின் சோகமும் ஏற்பட்டு மலைக்காவடிச் சுமையை கீழே இறக்கி வைத்துவிட்டு அருகிலுள்ள நீரோடும் வனத்திற்குப் போய் வாமதேவ முனிவர் குகாச்சிரமம் சென்று இடும்பி உதவிய காய்கனி கிழங்கு முதலியவைகளை புசித்து பசி தீர்த்துக் கொண்டு நீரருந்தி களை தெளிந்து, மீண்டும் மலைகளை தூக்கிப் போவதற்கு திருவாவினன்குடி என்னும் ஸ்தலத்திற்கு வந்து சேர்ந்தான். மலைகளிரண்டையும் பூஜித்தான். முனிவருடைய உபதேச மூல மந்திரத்தை ஜெபித்து இரு மலைக் குன்றுகளையும் மேகம்போல் எழுந்து மேலே தூக்கினான் ; தூக்க முடியவில்லை. கைகள் பிசகிற்று. கால்கள் எறிந்தன. கண்விழிகள் பிதுங்குவதுபோல் ஆயிற்று. அப்போது இடும்பாசுரனுக்கு மதிகெட்டு, மனம் பிரமித்து மறுபடியும் யோசித்து ஆகா அகத்திய முனிவரே ! என்னுடைய அபார சக்தி குறையவேண்டிய காரணம் என்னவென்று மனம் பலவாறு பதை பதைத்து அங்கும் இங்கும் ஓடிக் கடைசியாய் சிவகிரி என்கிற சிகரத்தின்மீது ஏறி கண்கள் தீப்பொறி பறக்க மிகுந்த கோபத்துடன் நின்று பார்த்தான். அங்கு ஒரு குழந்தை அழகு வடிவமாய் குராமர நிழலில் உட்கார்ந்து விளையாடுவதைக் கண்டான்.

உடனே இடும்பாசுரனுக்கு மனம் பலவாறு பிதற்றம் ஏற்பட்டு இக் கட்டழகுடைய குழந்தை யாருடையதோ அல்லது தேவர்களுடையதோ இல்லை மாயமந்திரம் கற்றவனோ அறியேன் அறியேன் என்று அருகிற் சென்று உற்றுப் பார்த்தான். ஆயிரங் கோடி சூரியன் ஒன்றெனத் திரண்டதுபோன்ற அழகும் உபவீத மணிந்த மார்பும், பிடரியிற்றாங்கும் குஞ்சியும், கருணை யொழுகும் திருக்கண்களும், சந்திரன்போன்ற திருமேனியும் உடைய குழந்தையைக் கண்டு, அப்பா குழந்தாய் நீ யார் ? இங்கு எதற்காக வந்தாய் ? உன்னுடைய நாமதேயம் என்ன ? உன

தாய் தந்தையர் எங்கே? என்று பற்பல வினுக்கள் வினவினுன். அதற்கு சுப்பிரமணியக் குழந்தை யாதொரு வார்த்தையும் பேசாது இவனைப் பரிசோதிக்கவேண்டுமென்று புன்சிரிப்புடன் சிரித்துக்கொண்டு பின்பும் விளையாடிக்கொண்டிருந்தார். அப்போது இடும்பாசுரனுக்கு மிகுந்த கோபம் பிறந்து கண்கள் சிவந்து, குழந்தாய் அதி சீக்கிரத்தில் இந்தக் குன்றைவிட்டுக் கீழே இறங்கிப்போய்விடவேண்டும். இல்லையேல் நான் கொலை புரியத்தக்க கொடிய அசுரகுலத்தில் உள்ளவன் என்பதை நீ அறிவாய் என்று கோபமாய் எடுத்துக் கூறினுன்.

அப்போது குழந்தைவேல் இடும்பாசுரனைப் பார்த்து ஓ! கர்வங்கொண்ட இராட்சதா! நீ கொண்டுவந்திருக்கும் இந்த மலைகள் இரண்டும் என்னுடைய திருவிளையாட்டிற்கு மிகவும் மேன்மையாயிருக்கின்றன. ஆனதால் நான் இந்த மலைக்குன்றை விட்டுக் கீழே இறங்கிப் போகமுடியாது. உனக்கு மிகுந்த சாமர்த்தியமும் அபார சக்தியும் இருந்தால் உடனே நீ இந்த மலைகளை தூக்கிக்கொண்டு போகலாம் என்று உரைத்தார். அப்போது இடும்பாசுரனுக்கு மிகுந்த கோபம் பிறந்து, மீசை துடித்து, கண்கள் சிவந்து கைகால்கள் பதரி பல்லை நெருநெருவென்று கடித்துக்கொண்டு குழந்தையாகிய சுப்ரமண்யக் கடவுள்மீது எட்டிப் பாய்ந்தான். அப்போது முருகக்கடவுளது சுடர் வேலோ, அடர்கோலோ அறிகிலோம் எதிர்த்துப் பாய்ந்து இடும்பாசுரனுடைய உயிரைப் போக்கவே இடும்பாசுரன் அகத்திய முனிவருக்கு அபயம், அபயம் என்று அழுது மலைபோல் சாய்ந்து கீழே விழுந்து உயிர் துறந்தான். அதுசமயம் அட்டதிக்கு நாகங்களும், பிரமதண்டும் அஞ்சி, ஒளிந்து அகத்திய முனிவருக்கு அறிவித்து அவை அவை தம் இருப்பிடம் சேர்ந்தது. உடனே அகத்திய முனிவர் அவ்விடம் பிரசன்னமாகி முருகக் கடவுளிடம் பலவாறு தர்க்கமிட்டு கடைசியாய் அகத்திய முனிவர் முருகக் கடவுளின் உயிரைப் போக்க நினைந்து அப்பா குழந்தாய் நான் உனக்கு ஞானக் குளிகை தருகிறேன் அதை நீ அன்புடன் சாப்பிடவேண்டும் என்று அநேக விஷக் குளிகைகளை எடுத்துக் கொடுத்தார். அதை முருகக் கடவுள் வாங்கி வாங்கி

புசித்தும் யாதொன்றும் செய்யவில்லை. அப்போது சுப்பிரமணியக் கடவுள் அகத்திய முனிவரைப் பார்த்து நாம் உமக்கொரு கவனக்குளிகை தருகிறோம் அதை நீர் சாப்பிடவேண்டும் என்று தனது திரேகத்திலிருந்து உருட்டி திரட்டிக் கொஞ்சம் திருமேனி எடுத்துக் கொடுத்தார். அதை அகத்திய முனிவர் அன்புடன் வாங்கிச் சாப்பிட்டதும் ஆகாயத்திற்குப் போய்விட்டார். பின்பு, ஆகாயத்தில் அகத்திய முனிவருக்கு சுப்பிரமண்யக் கடவுள் ஞானம் பிறந்து 100 பாடல்கள் ஆறெழுத்தந்தாதி பாடி 100 அடியும் கீழே இறங்கிவந்து முருகக் கடவுளைச் சுற்றி வலம் வந்து சுவாமி! அடியேனுடைய அறியாத குற்றங்களைப் பொறுத்து என்னை ஆட்கொள்ளவேண்டுமென்று பலவாறு முருகக்கடவுளை பிரார்த்தித்துக்கொண்டார். அதுசமயம் இடும்பியானவள் பதை பதைத்து ஓடோடியும் வந்து கண்ணீர் வடித்து புருஷனுகிய இடும்பாசுரன் உயிர்துறந்து கிடப்பதைப் பார்த்து அழுதுகொண்டு நின்றாள். அப்போது சுப்பிரமணியக் கடவுள் மனமிரங்கி ஷடி இடும்பிக்கும் காக்ஷி கொடுத்தருளினர். அப்போது இடும்பியானவள் சுவாமியை அடிபணிந்து நமஸ்கரித்து, சுற்றி வலம் வந்து எனதய்யனே! என் புருஷன் அறியாமற் செய்த குற்றங்களைப் பொறுத்து எனக்கு மாங்கல்யப் பிச்சைக் கொடுத்து எங்களை ஆட்கொள்ளவேண்டுமென்று நமஸ்கரித்து நின்றாள். அப்போது முருகக்கடவுள் உள்ளம் இளகி அவ்வாறே மாங்கல்யப்பிச்சைக் கொடுத்து இடும்பாசுரனைத் தட்டி எழுப்பினர். அப்போது இடும்பாசுரன் தூங்கி விழித்தவன்போல் விழித்து திரண்டு எழுந்து சுவாமியைக் கண்டு வணங்கி சுவாமி! அடியேனுடைய அறியாக் குற்றங்களை மன்னித்து ஆட்கொண்டருளவேண்டுமென வேண்ட முருகக் கடவுளும் அவ்வாறே மன்னித்து அவன் வேண்டிய இரு வரங்களையும் கொடுத்து மறைந்தார். அதில் ஒன்று தன்னைப்போல் காவடி எடுப்பவர்களுக்கு அவர்கள் கோரும் வரங்களைக் கொடுப்பது, மற்றொன்று தான் கொண்டுவந்த மலையில் சதா காவலாக இருப்பது.

இது காரணமாகவே அன்றைய நாள்தொட்டு இதுகாலம் வரை அன்பர்கள் காவடி எடுப்பதுவும், கோரும் வரங்களைப்

பெறுவதுமாக நடந்துவருகிறது. இது புராண வரலாற்றின் விஷயமாக இன்றும் பக்தஜனங்கள் பழநி ஆண்டவர் தரிசனார்த்த மாக மலைக்குச் செல்லும்போது மலையில் நடு மத்தியில் காவலாக இருக்கும் இடும்பசுவாமி கோவிலும், குராவடிவேலர் சன்னதியும் அகத்தியர், சிவலிங்க மூர்த்தியும், இடும்பன் தோளில் காவடி வைத்துக்கொண்டு நிற்கும் தோற்றங்களும் இன்றைக்கும் காணலாம்.

## 5. போகர் தண்டபாணி விக்ரஹம் செய்து பூஜித்த வரலாறு.

கலியுக வரதனும், கண்கண்ட தெய்வமாயும் பழநிமலைமீது கோவில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி மூர்த்தியை முற்காலத்தில் 18 சித்தர்களில் ஒருவரான **போகர்** தமது வாழ்நாட்களை வீண்போக்காது நவபாஷாணம் அதாவது 9 வகை மருந்து சரக்குகளினால் ரசக்கட்டாகத் திரட்டி விக்ரஹம் ஒன்று அழகு சிறக்கச் செய்து அதற்கு **ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி** என்று நாமதேயம் சூட்டி பழநிமலை ஆலயத்திற்குள் இருத்தி, தாமும் தம்முடைய சிஷ்பர்களும் பூஜித்து வந்தார்கள்.

பின்பு, போகர் தமது சிஷ்பர் **புலிப்பாணியாரை** அழைத்து, எனதன்பிற்குரிய புலிப்பாணி! நாள்தோறும் தவறாது பழநிமலை ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி மூர்த்தியை அதி பக்தியுடனும் விசுவாசத்துடனும் பூஜித்து பணிந்துவரும் பக்தர்களுக்கு கோரிய வரங்களையும், ஆயுள் விர்த்தியையும், திரேக சௌக்கியத்தையும் கொடுத்து காத்து ரக்ஷிப்பார் என்று கூறி, பின்னர் பழநிமலைமீதே போகர் சமாதியடைந்துவிட்டார். இன்றைக்கும் போகர் சமாதி பழநிமலைமீது இருக்கிறது. தென்மேற்கு மூலையில் போகர் சன்னதியில் அவர் வழிபாட்டில் இருந்த புவனேசுவரி துர்க்கை அம்மன் உருவும், மரகதலிங்கம் ஒன்றும், இரண்டு சக்கரங்களும் பூஜையில் வைத்துள்ளன. ஷை போகர் சமாதிக்கு தினந்தோறும் ஸ்ரீமத் போகநாத புலிப்பாணி பாத்ரசுவாமி அவர்களால் பூஜை நடத்தப்பட்டுவருகிறது.

முன்னர் போகசித்தரின் உபதேசம்பெற்ற புலிப்பாணியாரும் தமது வாழ்நாட்களை வீண்போக்காது ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி மூர்த்தியை அதி பக்தி விசுவாசத்தோடு நித்யமும் பூஜித்து ஷண்முக நதிக்குச் சென்று தாம் கற்றுணர்ந்த சடாக்ஷர விஞ்சை மந்திரத்தால் கையில் தீர்த்தம் திரட்டிக் கொடிய குணம் வாய்ந்ததும், கொல்லும் தன்மையுடையதும், கோரப் பல்லையும், கூரிய நகத்தை உடையதும், 16 அடி நீளத்தை ஒரே பாய்ச்சலாய் பாயும் தன்மையுடையதுமான வேங்கைப் புலியை அடக்கி தமக்கு வாகனமாக்கி அதன்மீது வீற்று ஷெ ஷண்முக நதியிலிருந்து தீர்த்தம் திரட்டிக் கொண்டுவந்து பழநி ஆண்டவருக்கு அபிஷேகம் செய்து பூஜித்து பணிந்து வந்திருக்கின்றார் என்றும் பற்பல புராணங்கள் கூறுகின்றன. அதன்படியே இப்போதும் பழநி மலைக்கோவில் அயன் மிராஸ் பண்டாரங்கள் தினந்தோறும் வரதமா நதிக்குச் சென்று குடங்களில் தீர்த்தம் கொண்டுவந்து ஸ்ரீ பழநியாண்டவருக்கு அபிஷேகம் செய்து பூஜித்து பணிந்து வருகிறார்கள் என்றும் நாம் இங்கு எடுத்துக் கூறுகின்றோம்.

## 6. பக்த ஜனங்கள் பழநி ஸ்தலத்தில் தங்குவதற்கு சௌகரியமுள்ள மடங்கள்.

பக்தர்கள் பழநி ஸ்தலத்தில் தங்குவதற்குள்ள தர்ம சத்திரங்கள் பழநி டவுனிலும், மலை அடிவாரத்திலும் ஒவ்வொரு ஜாதியாரும் தங்கள் தங்கள் இனத்தார்களுக்கென கட்டி வைத்துள்ள மடங்களும், தர்ம சத்திரங்களும் எதேஷ்டமாய் இருக்கின்றன.

**இவையன்றி சமீபகாலத்தில்,**

ஈரோடு, உயர்திரு. V. V. C. R. முருகேச முதலியார் அவர்களால்,
ஸ்ரீ சண்முகத் திருவருள் கணபதி இராமலிங்க நிலையம்,

உடுமலை, கணபதிபாளையம், T. R. நாராயணசாமி நாயுடு
அவர்களால், ஸ்ரீ முருகன் திருவருள் நடராஜ நிலையம்,

கோவை, பீளமேடு, திரு. P. S. G. கங்காநாயுடு அவர்களால்,
திருவருட்ஜோதி ஸ்ரீ பாலசுப்பிரமணிய நிலையம்,

காளையார்மங்கலம், திரு வீரப்ப அம்பலகாரர் அவர்களால், திருவருட்ஜோதி நிலையம்,

கோவை, நஞ்சுண்டாபுரம் டிரஸ்டி, திரு. ந. கோவிந்தசாமி நாடார் அவர்களால் கட்டிவைத்துள்ள நாடார் மடங்களும், காணக் கண்காக்ஷியாய் அமைந்து விளங்கும்.

## 7. பக்தஜனங்கள் பிரார்த்தனையின்பேரில் பழநி ஆண்டவருக்கு கொண்டுவந்து செலுத்தும் காவடி வரலாறு.

| | | |
|---|---|---|
| தங்கக்காவடி | வெள்ளிக்காவடி | பால்க்காவடி |
| பன்னீர்க்காவடி | சந்தனக்காவடி | சர்க்கரைக்காவடி |
| தீர்த்தக்காவடி | எண்ணெய்க்காவடி | அன்னக்காவடி |
| இளநீர்க்காவடி | அலங்காரக்காவடி | அக்கினிக்காவடி |
| கற்பூரக்காவடி | சர்ப்பக்காவடி | மச்சக்காவடி |
| கோழிக்காவடி | மணல்காவடி | புஷ்பக்காவடி |

இன்னும் பற்பல காவடிகளும் பழநி ஆண்டவர் சந்நிதானத்திற்கு ஒவ்வொரு உற்சவ காலங்களிலும் மற்ற இதர நாட்களிலும் சதா பக்த கோடிகளால் பிரார்த்தனைப்படி கொண்டு வந்து செலுத்தப்படுகிறது.

### ஆசிரிய விருத்தம்.

வடமதுரக் காவடிகள் சர்க்கரைக் காவடிகள்
மாங்கனிக் காவடிகள் நெய்
வார்த்த காவடிகள் பல தீர்த்தக் காவடிகள் பால்
வைத்த காவடிகள் நீற்றுப்
போடிவைத்த காவடிகள் சந்தனக் காவடிகள்
சற்பூரக் காவடிகள் சீர்
புஷ்பக் காவடிகள் இளநீர் பன்னீர்க் காவடிகள்
புனுகுக் காவடிகள் வருவோர்
முடியெலாம் காவடிகள் தோளெலாம் காவடிகள்
முதுகெலாம் காவடிகள் காவடிகளாய்
முக்காத வழியகல எட்போட விடமின்றி
முக்கிய மலைமீதிலேறும்

படியேலாம் காவடிகள் காவடிகளாகவிப்
பாரேல்லாம் பூசை கோண்டாய்
பழமறைகள் மோழியசில தோழுமவர்க ளனுகூல
பழநிமலை வடிவேலனே.

பழநி ஸ்தலமாகப்பட்டது பஞ்சாமிர்தத்திற்கும், சந்தனம், விபூதி பிரசாதத்திற்கும் மிகவும் பேர் பெற்ற புண்ணிய ஸ்தலம் என்பதை அன்பர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

## 7. இப்புண்ணிய ஸ்தலத்தில் பக்தர்கள் ஸ்நானம் செய்யவேண்டிய தீர்த்தங்கள்.

### 4 இடங்கள்.

1-வது ஷண்முகநதி
2-வது வரதமாநதி
3-வது சரவணப்போய்கை
4-வது பேரிய ஆவுடையார் கோவில்.

---

ஷை தீர்த்தங்களில் பக்தகோடிகள் ஸ்நானம் செய்து கொண்டு முருகவேளை அதி பக்தியோடு பூஜித்து தங்கள் தங்கள் பிரார்த்தனைக் காவடிகளைக் கட்டி பலவித மேளவாத்தியத்துடனுவது அல்லது அரோஹராவென்ற சப்த கோஷத்துடனுவது அருள்முகத்தோடு கடைவீதி வழியாகப் புறப்பட்டு முதலில் பாதவினுயகரைப் பூஜிக்கவேண்டும்.

2-வது பழநிமலையை கிரிப்பிரதக்ஷணம் சுற்றிவரவேண்டும்.

3-வது ஷை பாதவினுயகர் கோவில் வந்து தேங்காய் பழம் கற்பூரம் வைத்து பூஜித்து தக்ஷிணையிட்டு பூக்கட்டி மண்டபத்தின் வழியாய்ப் புறப்பட்டு ஆரியர்கள் மண்டபம் புகுந்து அழகிய படிக்கட்டுகளில் நடந்து இடும்பர் சந்நிதானம் போய்ச் சேரவேண்டும். ஷை இடும்ப ஸ்வாமிக்கும் தேங்காய் பழம் வைத்து கற்பூர தீபாராதனை செய்து தக்ஷிணையிட்டு மறுபடியும் படிக்கட்டுகளில் நடந்து மலைக்குப்போய்ச் சேரவேண்டும்.

முதலாவது வெளிகிரி சுற்றி வலம் வரவேண்டும். 2-வது உள்கிரி சுற்றி வலம் வரவேண்டும். 3-வது நீராடிப் பத்திக்கிரி

சுற்றி வலம் வந்து ஸ்ரீ பழநி ஆண்டவரைக் கண்டு தெரிசிக்க வேண்டும். பக்தகோடிகள் பிரார்த்தனைப்படி கொண்டுவந்திருக்கும் காணிக்கைகளையும் தங்கம், வெள்ளி மற்றும் எந்தவகை சாமான்களையும் மலைக்கோவில் தேவஸ்தானம் ஆபீஸ் உத்தியோகஸ்தர்களிடம் காண்பித்தும், தேவஸ்தான புஸ்தகத்தில் பதிவு செய்தும் முன்புறம் வைக்கப்பட்டிருக்கும் உண்டியல் பெட்டகத்தில் தங்கள் தங்கள் கைப்படவே செலுத்தப்படவேண்டும். பின்னர் தாங்கள் சுவாமிக்குச் செய்யும் அபிஷேக விபரங்களையும் ஷை தேவஸ்தானம் புஸ்தகத்தில் ஊர், பெயர், விலாசத்துடன் ரிஜிஸ்டர் செய்து ரசீது பெற்றுக்கொண்டுதான் மற்ற அபிஷேக காரியாதிகளுக்கு ஆரம்பிக்கவேண்டும். பக்த ஜனங்கள் அவரவர்கள் பிரார்த்தனை கைங்கரியங்களை ஸ்ரீ பழநியாண்டவருக்குச் செலுத்தி அதி பக்தி விசுவாசத்தோடு பூஜித்து பிரசாதங்களும், கோரிய வரங்களும் பெற்று கீழே இறங்கி வரலாம். இது நிற்க, படிக்கட்டுகளில் ஆயிரக்கணக்கான பரங்களும், கூன், குருடு, மொண்டி, முடங்களும் பக்த ஜனங்களை பிச்சை கேட்டு வருந்துவார்கள். பக்தகோடிகள் அவரவர்கள் சக்திக்கு தகுந்தவாறு தான தருமங்களும் கொடுத்துவரலாம்.

இந்த புண்ணிய க்ஷேத்திரத்தில் பக்த ஜனங்கள் ஸ்நானம் செய்வதற்கு முக்கிய தீர்த்தங்கள் 4 இடங்கள் என்று முன்புறம் குறிப்பிட்டிருக்கிறது. அதில்,

## 1-வது ஷண்முகநதி வரலாறு.

ஷை ஷண்முகநதியாகப்பட்டது பழநிமலைக்கு தென்புறத்தில் உற்பத்தியாகி பாலாறு, பச்சையாறு, கல்லாறு, கானாறு, பொருந்தலாறு, வரத்தாறு என்னும் 6 நதிகளும் பல பாகங்களிலும் ஓடி கடைசியாய் ஒன்று சேர்ந்து ஷண்முகநதியாகப் பரவி ஷண்முகநதியென்ற பெயரால் வழங்குகிறது. ஷை புண்ணிய ஷண்முகநதியாகப்பட்டது பழநிமலை அடிவாரத்திலிருந்து சுமார் 3 மைல் தூரம் இருக்கும். ஷை நதியில் பக்த ஜனங்கள் குளித்து முழுகி கரையின்மேல் உள்ள நவக்கிரஹ ஆலயத்தைச் சுற்றி வலம் வந்து ஆறுமுக விநாயகரை தரிசித்து ஆஞ்சநேயர், தக்ஷிண

மூர்த்தி, புலிப்பாணி முதலிய சுவாமிகளைப் பூஜித்து ஷை ஷண்முகநதியிலிருந்து பிரார்த்தனைப்படி பக்த ஜனங்கள் காவடி கட்டி பலவித மேளவாத்தியத்துடன் பழநிமலைக்குச் சென்று ஆண்டவரைக் கண்டு தரிசித்துவந்தால் சகல பாவங்களும் தீரும்.

இந்நதிக் கரையிலே சுந்தர விநாயகருக்கும், தென்முகப் பரமாசாரியரான தக்ஷிணாமூர்த்திக்கும் அழகிய சிறு தளிகள் உள்ளன. இவை சமீபகாலத்தே கட்டப்பட்டவையாம். இவ்வாற்றிலிருந்தும், திருவாவினன்குடிக்குக் கீழ்பாலுள்ள சரவணப் பொய்கையினின்றும், கதிர்வேற்பெம்மானுக்கு அன்பர்கள் காவடிகளிற் சிறு கலசங்களிலே, பால் முதலியன சேமித்தும் நறும் புகையிட்டுத் தோள்மேல் எடுத்துவைத்து அன்புக் கண்ணீர் பாய மெய்மயிர் சிலிர்ப்ப முருகன் திருநாமங்களை மொழிந்து ஆடியும், பாடியும், ஓடியும், நடந்தும் மலைப்படிமீதேறி குமரப் பெருமானை கண்பெற்ற பயன் எய்த வழிபட்டுத் துதியாநிற்பர். மலையின்மீதுள்ள ஆண்டவனுக்கு, ஷண்முகநதியுட்கலக்கும் ஆறு நதிகளுள் ஒன்றாகிய வரத்தாற்றினின்றே பண்டாரங்களால் தொன்றுதொட்ட வழக்கப்படி திருமஞ்சனத்திற்கெனப் புனித நீர் கொண்டுவரப்படுகிறது.

## 2-வது வரதமாநதி வரலாறு.

ஷை வரதமாநதி பழநிமலைக்குத் தென்புறத்தில் இருக்கிறது. மலை அடிவாரத்திலிருந்து சுமார் 1 மைல் தூரம் இருக்கும். ஷை நதியில் ஓடும் ஜலமாகப்பட்டது ஷண்முகநதியோடு போய்ச் சேருகிறது. பழநி ஆண்டவர் அபிஷேகத்திற்கு ஷை நதியிலிருந்துதான் தீர்த்தங்கள் கொண்டுபோய் மிராஸ் பண்டாரங்கள் மலைக்கோவில் தேவஸ்தானம் ஆபீஸ் உத்தியோகஸ்தர்களிடம் காண்பித்து பழநி ஆண்டவருக்கு அபிஷேகம் செய்துவருகிறார்கள். சில மிராஸ் பண்டாரங்கள் சுவாமிக்கு சந்தனம் அறைத்துக்கொடுப்பது, புஷ்பமாலை கட்டிக் கொடுப்பது, தினந்தோறும் ஆண்டவருக்கு நடக்கும் ஆறுகால பூஜைக்கும் வேண்டிய சாமான்கள் எடுத்துக் கொடுப்பதுமாக ஆலயப் பணிவிடைகள் செய்துவருகிறார்கள். சில பண்டாரங்கள் ஷை வரதமா

நதியிலிருந்து தீர்த்தம் கொண்டுவந்து குடங்களில் வைத்து பக்தர்கள் சுவாமிக்கு செய்யும் அபிஷேகங்களுக்கு உதவிபுரிந்தும் வருகிறார்கள்.

ஷை வரதமாநதியில் பக்த ஜனங்கள் ஸ்நானம் செய்வதற்கும், துவைத்துக் குளிப்பதற்கும் போதுமான படிக்கட்டுகளும், கரையின்மேல் பிள்ளையார் கோவிலும் இருக்கிறது. பக்த ஜனங்கள் ஷை வரதமா நதியிலிருந்தும் பழநி ஆண்டவருக்கு காவடிகள் கட்டிக் கொண்டுவந்து செலுத்துகிறார்கள்.

## 3-வது சரவணப்பொய்கை வரலாறு.

சரவணப்பொய்கை பழநிமலை அடிவாரம் 3-வது படைவீடாகிய திருவாவினன்குடிக்கு பின்புரம் புண்ணிய தீர்த்தமாக பக்தகோடி ஜனங்களால் கொண்டாடப்பட்டு வழங்கி வருகிறது. ஷை சரவணப்பொய்கையில் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிலிருந்து 6 பொறியாகப் பொரிந்து சரவணப்பொய்கையில் விழவே அதிலிருந்து குழந்தைகள் அழகு வடிவமாய்ப் பிறந்து கார்த்திகைப் பெண்கள் அறுவரும் அன்புடன் எடுத்து பாலூட்டி வளர்த்துப் பின்னர் பார்வதியம்மையார் வாங்கி ஆறுமுகம், பனிரெண்டுகை வேலவன், ஷண்முகன், சரவணபவன், கார்த்திகேயன் எனவும் பல நாமதேயம் சூட்டி தமது மடியில் வைத்து ஒன்ருய் தழுவியதால் ஒருமுக சுப்பிரமணிய அவதாரம் எடுத்தார் என்றும் ஷை அவதாரம் எடுப்பதற்கு காரணம், தேவர்களை இம்சித்து சிறையில் அடைத்து கொடிய அக்ரமங்கள் செய்துகொண்டுவந்த சூரபத்மர்களையும், அசுரர் சேனைகளையும் சம்ஹாரம் செய்து தேவர்களுடைய குறைகளை தீர்த்துக் கொடிய சிறையினின்றும் தேவர்களை மீட்கவேண்டுமென்றும் ஸ்ரீ ஷண்முகக் கடவுள் சரவணப் பொய்கையில் பிறந்தார் என்றும் அநேக புராணங்கள் கூறுகின்றன.

ஆனதால் பக்தகோடிகள் ஷை சரவணப்பொய்கையில் தீர்த்தம் எடுத்து ஸ்நானம் செய்து அரசடி விநாயகர் கோவில் நாகப் பிரதிஷ்டையில் காவடி கட்டி ஆண்டவர் தரிசனார்த்தமாய் புறப்

பட்டு பழநிமலையை கிரிப்பிரகாரம் செய்துவந்தால், சகலகோடி பாவ கருமங்களும் தீரும் என்பதில் சந்தேகமில்லை.

ஷை சரவணப்பொய்கை முன்பு ஒரு கவலைக் கிணருக இருந்துவந்தது; அதை ஸ்ரீமத் சட்டிச்சாமிகள் பார்த்து பல விடங்களிலும் சென்று பக்த ஸ்ரீமான்களிடம் யாசகம் வாங்கி சுமார் 15000 ரூபாய்வரை சேர்த்து சீர்திருத்தி, புதிய கல்கட்டு களால் அநேக நகாஸ் வேலைகள் செய்து கட்டப்பட்டிருக்கிறது. இதில் காணும் விருக்ஷம் நெல்லியாகும்.

## 4-வது பெரிய ஆவுடையார் கோவில் வரலாறு.

ஷை பெரிய ஆவுடையார் கோவில் பழநிமலை அடிவாரத்தி லிருந்து சுமார் 3 மைல் தூரம் இருக்கும். ஷை நதியில் எக்கா லத்திலும் ஜலம் வற்றுவது கிடையாது. ஏனென்ருல் அணைக் கட்டுகளால் ஜலத்தை தேக்கி நிறுத்தியிருப்பதனுல் பக்தகோ டிகள் நன்ருய் ஸ்நானம் செய்துகொண்டு கரையின்மேலுள்ள சுயம்புலிங்கம் என்று சொல்லப்பட்ட பிரகதீஸ்வரர் ஆலயத் தைச் சுற்றி வலம் வந்து சுவாமியை பூஜித்து பின்னர் பழநி மலைக்கு வந்து ஆண்டவரை தரிசிக்கலாம். கண்ணுக்கினிமை யும், அழகும், தெய்வீகமும் நிரம்பிய இடங்கள் பல பழநியைச் சூழ உண்டு. அவற்றுள் பெரியாவுடையார் கோவில் ஷண்முக நதியின் கிழக்குக் கரையில் அமைந்துள்ளது. இது பழநிக்கு வடக்காக பழைய தாராபுரம் வழியில் 3 மைல் தூரத்திலும், திண்டுக்கல்லிலிருந்து பொள்ளாச்சி செல்லும் இருப்புப் பாதை யில் ஷண்முகநதி ரயில் பாலத்திற்கு அடுத்து இருப்பதாகும். இத்தெய்வீகமான ஆறு கொடைக்கானல் மலைத் தொடரின் அழகிய பூம்புரை முதலிய பள்ளத்தாக்குகளில் வீழ்ந்துவரும் அருவிகள் சேர்ந்து பாய்வது. பழநி உடுமலைப்பேட்டை பெரு வழியில் வருவதான இந்நதியின் தென்பாகத்துள்ள ஒரு பகுதி யிற்ருன் பழநிக்கு வரும் பக்தகோடிகள் திரளாக வந்து நீராடி இறைவனுக்குக் காவடி எடுத்துச் செல்வது. இந்த நீராடும் துறை பழனியிலிருந்து சுமார் 2 மைல் தூரமாகும்.

பெரியாவுடையார் கோவில் அமைந்துள்ள இடமானது கன்னிகாரவனம் எனத் தலபுராணத்திலே கூறப்படுகின்றது. இக்கோயில் கொங்கு சோழ அரசர்களாலே சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டிருத்தல்வேண்டும். சுயம்பு லிங்கம் மேற்குப்பார்த்த திருக்கோலம் சாலச் சிறப்புடையதாகும். சுவாமியின் பெயர் பிரகதீசுவரர் என்ற பெரியாவுடையார். இப்பெயருடைய சிவ சந்நதிகள் பல சோழ நாட்டில் சோழ அரசர்களால் எடுத்தனவாகக் காணலாம். இக்கோயிலின் திரு மதில்களில் பொறிக்கப்பட்டிருந்த 16 கல்வெட்டுக்கள் திருப்பணி தொடங்கு முன்பே அரசினர் கல்வெட்டாராய்ச்சிக் கழகத்தாரால் படியெடுக்கப்பெற்றுள்ளன. அவைகளின் குறிப்புக்கள் பின்வருமாறு:—

இங்கு சிவபிரானாகிய பெரியாவுடையாருக்கு மட்டுமே சந்நிதி உள்ளது. உமையம்மையாருக்குச் சந்நிதியில்லை. முன்பிருந்த சந்நிதி சிதைவுற்றமையால், அம்மையார் திருக்கோயிலை ஊர்க் கோயிலில் அமைத்தார்கள் என்பர். மற்றொரு காரணமும் கூறுவர். அம்மையார் பெரியநாயகி நகரத் திருக்கோயிலாகிய வில்வாரண்யத்திலே சென்று தவஞ் செய்யும்பொருட்டுச் சேர்ந்தமையே என்பர். அங்கு சென்று தவம்புரிந்த பெரிய நாயகி அம்மையாருக்குக் காட்சிகொடுத்து மணம் புரியவந்த கோலமே பழநி ஊர்க் கோயிலிலுள்ள கைலாசநாதராகிய சிவபெருமான் திருவடிவம். பெரியாவுடையார் கோயிலில் அம்மையாருக்குச் சந்நிதியில்லையாயினும் திருமால், பிரமன் முதலிய எல்லாப் பரிவார தேவர்களுக்கும் தனிச் சிற்றாலயங்கள் உண்டு. இங்குள்ள தட்சிணாமூர்த்தி, சந்திரசேகரமூர்த்தி, திருமால், சண்டிகேசுவரர் திருவுருவங்கள் மிக்க அழகும், சிற்பத் திறனும் உடையன. பெரியாவுடையார் திருச் சந்நிதியையடுத்து மகா மண்டபத்தில் நடராசப் பெருமான் வடக்கு நோக்கிய மூலதானப் பெருமானாக விளங்குகின்றார். இப்புராதனக் கோயில் பூஞ்சோலைகளும், வயலும் சூழ்ந்த ஷண்முகநதிக் கரையில் அமைந்துள்ள தூயதான இயற்கை வளம் நிரம்பியதாயிருத்தல் வழிபட வரும் மெய்யன்பர்களின் உள்ளத்தைக் கவர்வதாயிருக்கின்றது.

இக்கோயிலைப் பொறுத்து விழாக்கள் இல்லையாயினும், பிர தோஷத் திருவுலா சிறப்பாகக் கொண்டாடப்பட்டுவருகிறது.

இக்கோயிற் சந்நிதியில் கணக்கற்ற மணவினைகள் நடைபெறுகின்றன. தம்பதிகள் சூழ வரும் மக்கள் உண்டி சமைத்து உண்ணுவதற்கும், தங்கவும் வசதிகள் செய்யப்பெற்றுள்ளன. சமீபத்தில் விநாயகர் ஆலயமொன்று அக்கோயிலின் வெளிப் பாகத்தில் **திரு. மாரிமுத்து வேளார்** அவர்களால் கட்டப்பெற்றுள்ளது.

## 9. பக்தர்கள் பழநிமலையை வலம் வந்து அடையும் பயன்கள்.

பக்தகோடிகள் தினந்தோறும் சூரிய உதயத்திற்கு முன்பு எழுந்து காலைக் கடன் முடித்து, ஸ்நானம் செய்துகொண்டு ஒரு மனதுடன் பழநிமலையை ஒரு மண்டலம் அதாவது 48 நாள்வரை காலையிலும், மாலையிலும் கிரி சுற்றி ஆண்டவரை வழிபட்டு வணங்கி பூஜித்துவந்தால் தீராத நோய்களும் தீர்ந்து, ஆருத ரணங்களும் ஆறும் என்பதில் சந்தேகமில்லை. அன்றியும் ஷெ மலையில் விளைந்திருக்கும் மிகச் சிறந்த பச்சிலை மூலிகைகளின்மீது மோதியடிக்கும் சஞ்சீவிக் காற்றுகளால் முன்செய்த பாவ கர்மங்கள் தீர்ந்து நோய்கள் பறந்து திரேக சவுக்கியமும், ஆயுள் விர்த்தியும், நோயில்லா வாழ்வும், பொருள் செல்வமும், கல்வி யொழுக்க ஞானங்களையும் கொடுத்து பாதுகாப்பதுடன் தாம் கோரியபடி குழந்தை வரங்களையும் கொடுத்து காத்து ரக்ஷிப் பார் என்பதிலும் யாதொரு சந்தேகமும் இல்லை.

## 10. பழநி ஆண்டவரை தரிசிக்கும் பக்த ஜனங்களும், உத்தியோகஸ்தர்களும்.

இப்புண்ணிய ஸ்தலமாகிய பழநி க்ஷேத்திரத்திற்கு உற்சவ காலங்களிலும், மற்ற சாதாரண நாட்களிலும் பக்த ஜனங் களும், கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களும், பிரபல சீமான் களும், பிரபுக்களும், பட்டாக்காரர்களும், ஜமீன்தாரர்களும், மகாராஜாக்களும், மந்திரி பிரதானிகளும், மலையாள தேச பக்த கோடிகளும் பழநி ஆண்டவர் தரிசனார்த்தமாகப் பழநி க்ஷேத்தி ரத்திற்கு விஜயம் செய்கிறார்கள்.

## 11. பழநி ஸ்தலத்தில் பலவித சோதனைக்காவடிகள் வரலாறு.

இந்தப் பழநி ஸ்தலத்தில் வருஷந்தோறும் பங்குனி உற்சவத்திற்கு சோதனைக் காவடிகள் என்கின்ற சர்ப்பக் காவடி, மச்சக்காவடி, சேவல் காவடி, மணல் காவடி முதலியன தவறாது வந்துகொண்டிருக்கிறது. அதாவது பக்த ஜனங்களின் கனவில் ஸ்ரீ பழநி ஆண்டவர் பிரசன்னமாகி, மேல்கண்ட உயிர்ப் பிராணிகளை அறுத்துக் காவடியில் கட்டிப் பழநிக்கு கொண்டுவரும்படியாகவும், உத்திரவுப்படி பக்த ஜனங்கள் கொண்டுவந்து குறிப்பிட்டுள்ள இடங்களில் அவிழ்த்துப் பார்த்தால் மீன் உயிர்பெற்று ஜலத்தில் துள்ளி விளையாடுவதும், சேவல் உயிர்பெற்று கூவுவதும், சர்ப்பம் உயிராகி மலைச்சரிவுகளில் செல்லுவதும், மணல் சர்க்கரையாக மாறி ருசிப்பதுவும் பக்தகோடிகள் பார்த்தால் மனம் பலவாறு குதூகலம் ஏற்பட்டு பழநி ஆண்டவரை பல காலும் தொழுது பழநிவேலுக்கு அரோஹரா பழநி முருகனுக்கு அரோஹரா பழநி ஆண்டிக்கு அரோஹராவென்று அருள் பொங்கி கூவுவது பழநி ஸ்தலத்தை ஒலிபரப்பச் செய்யும்.

### ஆசிரிய விருத்தம்.

அய்யா நின் சன்னதியில் அறுத்தசேவல் கூவும்
அடிசிலிடுமீன் துள்ளிடும்
அரியபிற விக்குருடர் ஆனந்த மாகநின்
அழகுகண் டவசமுறுவர்
செய்யவள மிகுமணல் சர்க்கரைய தாகிநற்
சிறியகற் கண்டதாம்
சேய்மையோர் உன்னதக் காவடிகள் அனுதினம்
சேர்க்கலா நாளும் உளதோ
பையரவம் ஒருவர்கைப் பந்தெனவும் விளையாடல்
பார்த்து மானந்த முருவாய்
பாரமலை போலுறுவ கோரவிருள் அசுரர்கள்
பரக்கவந் திடுபோனுவே
வையகந் தனிலன்பர் செய்கின்ற அபிஷேக
வகைதனக் கேற்றவாறு
வடிவங்கள் காட்டியவர் மனமுருக நாட்டியநின்
மகிமைகள் சொல்லவெளிதோ

## 12. பழநி ஸ்தலத்தின் 12-மாதங்களின் உற்சவங்கள்.

**1-வது** சித்திரைமாதம் 24-ந்தேதி முதல் வைகாசிமாதம் 7-ந்தேதிவரை அக்கினி நக்ஷத்திர உற்சவம். ஷை உற்சவத்திற்கு வெளியூர்களிலிருந்தும், உள்ளூரிலிருந்தும் பல்லாயிரக்கணக்கான பக்த ஜனங்கள் சூரிய உதயத்திற்கு முன்பும் அஸ்தமனத்திற்கு பின்பும் அதாவது காலை மாலை இரு வேளைகளிலும் ஸ்நானம் செய்துகொண்டு பழநிமலையை 14 நாளைக்கும் கிரி சுற்றி வந்து கடைசிநாள் மலைக்குப்போய் பழநி ஆண்டவரை தரிசித்து வருகிறார்கள்.

2 வது வைகாசி-மீ விசாகம் வைகாசித் தேர் ஓடும்.

3-வது ஆனி-மீ கேட்டை நக்ஷத்திரம் ஆண்வருக்கு அன்ன அபிஷேகம் நடைபெறும்.

4-வது ஆடி-மீ ஆடி அமாவாசை அன்று ராமேஸ்வரத்தில் பக்தர்கள் கூட்டம் கூடுவதுபோல் இப்பழநி ஸ்தலத்திலும் மாபெருங் கூட்டங் கூடி பழநி ஆண்டவரை தரிசித்துப் போகிறார்கள்.

5-வது ஆவணி-மீ மூலத்திருநாள் உற்சவம்.

6-வது புரட்டாசி-மீ மகாநோம்பு விஜயதசமி வன்னிஹார சூரசம்ஹாரம்.

7-வது ஐப்பசி-மீ ஸ்கந்தர்சஷ்டி சூரசம்ஹாரம். ஷை சூரசம்ஹாரத்திற்கு வெளியூர்களிலிருந்து பல்லாயிரக்கணக்கான பக்த ஜனங்கள் பழநி ஆண்டவர் தரிசனத்திற்காக பழநி ஸ்தலத்திற்கு விஜயம் செய்கிறார்கள். ஷை உற்சவத்தில் பழநிமலை அடிவாரம் கிரிப்பிரகாரத்தில் ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுளால் சூரபத்மர்களை சம்ஹாரம் செய்யப்படுகிறது. அதாவது யானைமுகன், பானுகோபன், சிங்கமுகன், தாருகாசுரன் முதலிய கொடிய சூரபத்மர்களை பராசத்தி வேலாயுதத்தில் சம்ஹாரம் செய்து பக்த கோடி ஜனங்களுக்கு கோரிய வரத்தைக் கொடுத்து தேவர்களுடைய சிறையை மீட்டவும் தேவர்கள் புஷ்பமாரி பொழிகிறார்கள்.

8-வது கார்த்திகை-மீ திருக்கார்த்திகை தீபஜோதி, சொக்கப்பனை பழநி மலைமீது சுவாமி மெரவணை.

9-வது மார்கழி-மீ 1-ந்தேதி முதல் 30-ந்தேதிவரை பழநி மலையில் இரவு 3-மணி முதல் 6-மணிவரை திருப்பள்ளி எழுச்சி, சுவாமிக்கு பலவித அபிஷேகங்களும், பற்பல கனி வர்க்கங்களும் வைத்து நிவேத்தியமும் மகா நைவேத்தியமும் செய்யப்பட்டு பக்த ஜனங்களுக்குப் பிரசாதம் வழங்கப்படுவது.

10-வது தை-மீ தைபூச உற்சவம் ஷை உற்சவத்திற்குப் பக்த ஜனங்கள் பழநி ஆண்டவரை தரிசிக்க பல ஊர்களிலிருந்தும் பழநிக்கு விஜயம் செய்கிறார்கள். ஷை உற்சவம் பழநி டவுனில் பெரியநாயகி அம்மன் கோவிலில் நடைபெறும். அதாவது தைத்தேரில் முத்துக்குமாரசுவாமி எழுந்தருளி கோவில் 4 வீதியும் சுற்றிவந்து பக்த ஜனங்களுக்கு கோரிய வரத்தைக் கொடுப்பார். ஷை உற்சவத்திற்கும் பழநி ஸ்தலத்திற்கு பல்லாயிரக்கணக்கான பக்த ஜனங்களின் காவடிகளும், எடப்பாடி பக்தர்களின் காவடி கூட்டங்களும், பாலக்காட்டு பிராமண பக்தர்களின் காவடி ஆட்டங்களும் வெகு அற்புதமாய் இருக்கும்; ஆனதால் பக்தர்கள் ஷை தைபூச உற்சவத்திற்கும் பழநி ஆண்டவர் தரிசனார்த்தமாய் பழநி ஸ்தலத்திற்கு விஜயம் செய்கிறார்கள்.

11-வது மாசி மாதம் மாரியம்மன் உற்சவம் ஷை உற்சவத்திற்கு பக்த ஜனங்கள் அதி பக்தியோடு 15 நாளும் விரதமிருந்து அம்மனுக்கு பிரார்த்தனைப்படி அக்கினிச்சட்டி எடுத்து பலவித ஆடல் பாடல்களுடன் கொண்டாடப்படுகிறது.

12-வது பங்குனி-மீ ரத உற்சவம். ஷை ரத உற்சவத்திற்குத்தான் பழநிக்கு சோதனைக் காவடிகள் என்கிற மச்சக்காவடி, சர்ப்பக்காவடி, மணல் காவடி, சேவல் காவடி முதலிய பலவித உத்திரவு காவடிகள் பக்தர்களால் பழநி ஆண்டவருக்கு கொண்டுவந்து செலுத்தப்படுகிறது.

ஷை உற்சவத்தன்று கிரி வீதியில் பங்குனித் தேரில் சுவாமி எழுந்தருளி ரதம் ஓடும். அன்றியும் தங்கக்குதிரை வாகனமீதும், வெள்ளியானை வாகனமீதும், காமதேனு, கற்பக

விருக்ஷ வாகனமீதும், மயில்வாகனம், ஆட்டுக்கிடா வாகன மீதும் சுவாமி எழுந்தருளி மலையைச் சுற்றிவந்தும் பின்னர் கடைசிநாள் புஷ்பப் பல்லக்குமீதும் சுவாமி புறப்பட்டு விதவித வாண வேடிக்கைகளுடன் விமரிசையாய் மெரவணை நடைபெறும். ஆனதால் ஷை பங்குனி உற்சவத்திற்கு லக்ஷக்கணக்கான பக்த ஜனங்களும், பிரபுக்களும், கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களும் பழநி க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்கிறார்கள்.

ஒவ்வொரு உற்சவ காலங்களிலும் பக்த ஜனங்களின் சௌகர்யத்திற்காக பழநி முனிசிபாலிடி உத்தியோகஸ்தர்களால் ஸ்பெஷல் பைப்புத் தண்ணீர் கக்கூஸ் முதலிய சௌகர்யங்களும் செய்யப்பட்டுவருகிறது.

பழநி ஆண்டவர் தரிசனார்த்தமாய் மலைப் படிக்கட்டுகள் ஏறி மலைக்குப் போய் இறங்கி வர முடியாத பக்த விருத்தாப்பியர்களுக்கும் திரேகம் சௌக்கியம் இல்லாத பக்த ஜனங்களுக்கும் மலைக்குப்போய் ஆண்டவரை தரிசனம் செய்துவர டோலி சௌகர்யங்களும் உண்டு.

பிரார்த்தனையின்பேரில் பரங்களுக்கும் ஏழை பரதேசிகளுக்கும் அன்னம்போட்டு பசியாற்றவேண்டும் என்ற பக்த ஜனங்கள் பழநிமலை அடிவாரம் ரக்காலமடம் ஸ்ரீமத் சாதுசாமி மடத்தில் உள்ளவர்களிடம் விபரம் தெரியப்படுத்தி சிலவுக்கு கொடுத்து ஷை மடத்திலுள்ளவர்கள் மூலமாகவேண்டுமானாலும் சமைத்துப்போடச் செய்யலாம். இல்லையேல் சாப்பாட்டு கிளப்புகளுக்கு ஆர்டர் செய்து பரங்களுக்கு சீட்டுக் கொடுத்து சாப்பாடு போடலாம். இல்லையேல் தாங்கள் தங்கியிருக்கும் சத்திரத்தில் சமையல் வேலைக்காரர்களை நியமித்து சாதம் சமைக்கச் சொல்லி பரங்களுக்குப் போட்டு பசியாற்றலாம்.

பழநிமலை படிவாசல்களிலும் மலைமீது ஆலயங்களிலும் குரங்குகள் கூட்டம் கூட்டமாக கூடி விளையாடிக்கொண்டிருக்கும். பக்த ஜனங்கள் சுவாமிக்கு கொண்டுபோகும் தேங்காய் பழம் பொரி கடலை முதலிய தின்பண்டங்களையும் குழந்தைகள் கையில்

உள்ள பலகார பக்ஷணங்களையும் வழிப்பறி செய்துகொண்டு எதிர்த்து பயமுறுத்தும். பின்னர் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்புரிந்து படுகாயப்படுத்திக்கொள்ளும். ஆதலால் பக்த ஜனங்கள் மலைக்குப் போகும்போது ஷை குரங்குகளுக்கு பொரி கடலை வாழைப்பழம் முதலிய தின்பண்டங்கள் வாங்கிக்கொண்டு போய் கொடுத்துவருகிறார்கள். சில பக்தர்கள் சாதம் சமைத்து தயிர்விட்டுப் பிசைந்து தட்டுகளில் வைத்துக்கொண்டுபோய் குரங்குகளுக்குக் கொடுத்து பசி தீர்த்து வருகிறார்கள்.

## பழநி ஸ்தலத்தில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை.

தினந்தோறும் பழநிமலைக்கு இஸ்லாமானவர்கள் ஊதுபத்தி, சர்க்கரை, பழம், சந்தனம் முதலியவைகள் கொண்டுவந்து ஆண்டவருக்கு பின்புறம் நீராடிப்பத்தி கிரியில் வைத்து ஊதுபத்தி கொளுத்தி சந்தனம் தெளித்து பழநி பாவாவென்று சொல்லி பாத்திஹா செய்துவருகிறார்கள். இவ்வூரில் எக்காலத்திலும் முகம்மதியர்களுக்கும், இந்துக்களுக்கும் மிகவும் ஒற்றுமை என்பதை பக்தகோடிகளுக்கு இதனால் தெரியப்படுத்துகின்றோம்.

## 13. கிரிப்பிரகார காக்ஷிகள்.

மலையைச் சுற்றிப் பெரும்பாலும் நீர்வளம் நிறைந்த பசிய வயல்களும், சோலைகளும், தோப்புகளும், ஓடைகளும், நீர் நிலைகளும் காண்போர் உள்ளத்தினை உவகைக்கடலுட்படிவித்துப் பழநிப் பரமன் திருவருளில் கலக்க ஏதுவாக்குகின்றன. மேலும் இம்மலையின் கீழ் மருங்கிலே அகன்ற இடும்பன்குளம் என்ற தடாகம், அம்மலை அடிவாரத்தில் விளங்குகின்றது. இதன் நீர்ப் பரப்பு ஏ. 147. செ. 61 ஆகும். இங்கு மலரும் செந்தாமரை மலர்கள் எண்ணிறந்தன. இவை ஆண்டவருக்கு நாடோறும் அணியப்பெறுவன. இக்குன்றின் கிழக்கு நோக்கிய அடிப்பாகத்தில் கலிங்கன்பாறை சுப்பிரமணிய சுவாமி கோயில் கொண்டுள்ளனர். இக்கோயில் ஆயக்குடி கிராமத்தினரின் மேற்பார்வையிலுள்ளது.

பழநிக் குன்றினைச் சுற்றி அழகியதொரு சாலையிருக்கிறது. அது சுமார் ஒன்றேகால் கல் சுற்றளவுடையதாகி, தெற்குப் பக்கத்தே இருமருங்கும் அழகிய கடம்பு அரசு முதலிய பலவகை மரங்களும், பூஞ்சோலைகளும் நிறைந்தும் தேவஸ்தான மின் னொளி விளக்கு வரிசைகளையுடையதாகியும், மயிலின் பெரிய உருவங்களைத் தாங்கிய பெரிய மயில் மண்டபங்களை நாற்றிசையிலும் பெற்றும் விளங்குகின்றது. இக்குன்றினை வலம்வரத் தொடங்கும் முருகன் அடியார்களுக்கு முதன் முதல் தென்படுவது பாதவிநாயகர் கோவில். இப்பெருமானை வழிபட்டபின், கிழக்கே நோக்கி செல்லுவோர்க்கு தொடக்கத்தில் வடக்கு வீதியிலே வலதுபக்கம் புலிப்பாணி பாத்திர உடையார் அடிகளின் இருக்கையும், இடதுபுறம் பங்குனித்தேர் மண்டபமும், அம் மண்டபத்துள்ளே அமைந்துள்ள ஆண்டவர் நால் நிலைபமும் தென்படும். மேலும், கிழக்கே சென்றால் ஆயிரவர் தண்ணீர்ப் பந்தல் மடமும், அதற்கடுத்து வள்ளியம்மை, கணபதி சிற்றாலயங்களும் இருப்பதைக் காண்பர். இவற்றைக் கடந்ததும் வடக்கு மயில்வாகனமும், அதற்குப் பின்பு சிறிது தொலையிலே சரவணப்பொய்கைத் திருப்பணியாளராகிய சட்டிச் சாமியார் சமாதியும், “சதாசிவ பிர்ம்மம்” என்ற பெரியாரது சமாதி நிலையும் இதனையடுத்துத் தொட்டியார்குலத்து நாகம நாயக்கர் திருப்பணியாகிய பிர்ம்ம தீர்த்தக் குளமும், திருமூர்த்தியின் ஆலயமும், இலாட சந்யாசி கோயிலும், அருகில் ஐம்முக விநாயகர் சந்நிதியும் இருப்பதைக் காண்பர்.

பின்னர், இவைகளுக்கு அடுத்த ஆயக்குடி ஜமீன் 12 கற்றூண்கள் தாங்கியுள்ள பெரிய மயில்வாகன மண்டபமும், இதற்கெதிர்பக்கத்தில் மலையடியிலே அழகுநாச்சியம்மன் கோயிலும், விளங்குவதைக் காண்பர். மலையின் தெற்கு வீதியில் வரும்போது மூலைவாய்க்கால் கிரிவீதியின் ஓரமாகவே பாய்ந்து, மலையைச் சுற்றி மேற்குப் பக்கமாக ஓடி வையாபுரி ஏரியை நிரப்புவது தெரியும். மற்றும் அவ்வீதியில் பல தவச்சாலைகளும், அறச்சாலைகளும் தோப்புகளும் ஆங்காங்கே பொலிவு செய்கின்றன. இவைகளையடுத்து தெற்கு வீதித் தொடக்கத்திலே வடக்குப்

பார்த்துப் பல்லடம் சாமியார் மடமும், நந்தவனமும், வலப் பாகத்தே மலையின் தென் பாகத்திலே தேவஸ்தான நந்தவனமும், அதன் நடுவிலே, முன்பமைத்த மின் இயக்கி நிலையமும் இருக் கின்றன. இதுபோது தேவஸ்தான மின்னொளிப் பரப்பானது நகராண்மைக் கழகத்தாரது பைக்காரா மின்னியக்கி நிலையத் தோடு இணைக்கப்பெற்றுள்ளதாதலின், இந்நிலையம் அன்பர்கள் விடுதியாகத் தங்குவதற்கான வசதிகள் செய்யப்பட்டுள்ளது. இந்நிலையத்திற்கருகில்தான் கடம்ப மரங்கள் சோலைபோலச் சாலை யின் இருமருங்கிலும் ஓங்கி வளர்ந்து நிற்கின்றன. இவற்றை யடுத்துத் தெற்கு மயில்வாகன மண்டபமும், நந்தன் தோப்பும், அதன் நடுவண் சிவத்திரு சாதுசுவாமிகளின் திரு மடமும், பசு மடமும் உள்ளன. இதற்கடுத்துச் சந்தணஞ் செட்டியார் தோப் பும். இறங்கு கிணறும், அவற்றையடுத்து இராக்காலத் திருப் பணி மண்டபமும், சண்முக விலாசம் என்ற அன்னதான சமாஜ மும், அதற்கெதிர்முகமாக மலையை ஒட்டியுள்ள விநாயகர் சிற் றுலயமும் விளங்குதல் காணலாம். அதற்குச் சமீபத்தில் 1941-ல் கட்டப்பட்ட ஹரிஜன சேவா சங்கத்தைச் சார்ந்த நந்தன் விடுதி யும், அதன் வட கிழக்கே ஒரு சிறிய கற்கிணறும் உள்ளன. இவைகளின் வடமேற்கே கிரிவீதித் தெப்பக்குளமும், அப்பால் பொன்னம்பலம் பிள்ளை கல்மண்டபமும், திரு. ப. கிருஷ்ணசாமி பண்டாரம் அவர்கள் மடமும், இடப்பக்கம் இரட்டையம்பாடித் தொப்பினன் மடமும், ஆயக்குடி ஜமீன் வியாழ வரிசையிட்ட மேடையும், இடப்பால் பெரு வீதிக்கடுத்துச் சொக்கநாதர் மீனாட்சியம்மையார் திருக் கோயில்களமைந்த மண்டபமும் பொருந்தியுள்ளன. இதன் வாயிற் பக்கத்தே பழநி வைகாவூர் நாட்டை ஆட்சி செலுத்திய பாளையக்காரர்களாகிய குடவேல சின்னோப நாயக்கர் அய்யன், விஜயகிரி வேலாயுத சின்னோப நாயக்கர் அய்யன், வேலாயுத சின்னோப நாயக்கர் அய்யன் முத லானவர்கள் தமது பத்தினிமார்களுடன் உள்ள சிலைகள் அழகு றக் காட்சியளிக்கின்றன.

### 14. மலைப்படிகளிலுள்ள காக்ஷிகளும், கோயிலின் சிறப்பும்

திருமலையை வலம் வந்து மீனாட்சியம்மை மண்டபத்தில் அம்மையப்பரை வணங்கியபின் முதல் மயில் மண்டபத்தைச்

சுற்றி மலை ஏறுவதற்கு முன்பு எதிரே தனி மண்டபத்தின்கண் விளங்கும் பாதவிநாயகரை மீண்டும் வலம் வந்து திவான்பகதூர் P. S. G. ரங்கசாமி நாயுடு அவர்களது முன்னணி மண்டபமும் கடந்து, ஆயக்குடி மண்டபத்தை எய்தும்போது, கண்ணப்ப நாயனருக்கு ஸ்ரீ காளத்தியப்பர் திருவருள் தந்த நிலையும், முருகப்பெருமான் சூர்மா அறுத்த வீர உருவும், அப்பெருமான் தெய்வானையம்மையாரை மணந்த திருக்கோலமும், பிறவும் செதுக்கப்பட்ட சிற்பத் தூண்களைக் காணலாம். பின்பு, இரண்டாவது மயில் மண்டபமும், இதற்குத் தென்புறம் ஆரியர் மண்டபமும், இம்மண்டபத் தூண்கள் ஒன்றிலே அவினாசியிலே நம்பியாரூரர் முதலைவாய்ப்பிள்ளையழைத்த வரலாறும் விளங்கும். அதன் மருங்கே வள்ளியம்மை திருத்தளியும் அமைந்துள்ளது. மயில் மண்டபத்தின் மேற்கில் வைசியர் மடமும், கிழக்கில் விஸ்வகர்ம ஆச்சாரியர்களது மடமும் உள்ளன.

பழநித் திருமலைக் கற்படிகளின் மொத்த எண் 659 ஆகும். இப்படிகளின் திருப்பணி 1926-ம் ஆண்டில் தொடங்கிச் சுமார் 7 ஆண்டுகள் இடைவிடாது முயன்று 1932-ம் ஆண்டில் நிறைவேறியது. அன்பர் பலர் தம் அருங் கொடையினாலே ஒரு நூறாயிர ரூபாய்வரை இத்திருப்பணிக்குச் செலவாயின. இப்படிகள் திருவிழாக் காலங்களில் பக்தர்களின் வசதிகளுக்குப் போதாதிருந்ததால் அதனை சென்ற சில வருஷங்களாக பல பக்தர்களின் உதவியைக்கொண்டே விசாலப்படுத்திக்கொண்டு வந்திருப்பது காணலாகும்.

சில படி வரிசைகளிலே அந்தந்தப் படிகளை வெட்டுவித்தவர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இம்மலைப் படிவரிசையிலே ஆங்காங்கு விநாயகருக்கும், முருகப்பெருமானுக்கும் சப்த கன்னியர்களுக்குமாகப் பல சிறு கற்றளிகள் உள. திருவிழாக் காலங்களில் மட்டும் அல்லாது எக்காலத்தும் ஓயாத கூட்டத்தினரான அன்பர்கள் ஆணும் பெண்ணும் பிள்ளைகளுமாகப் படியேறி வழிபடச் செல்வோரும், சென்று திரும்புவோருமாகக் காணப்படுகின்றனர். பக்தர்கள் மலைமீது ஏறும்போதும் இறங்கும்போதும் அரோஹரா! முருகா! ஷண்முகா! சுவாமி சா

ணம்! என்ற சொற்களை பரவசத்தால் பாடித் துதிப்பர். அவர்களின் நெருக்கத்தினுள்ளும், எண்ணிலாத குரங்குகள் தத்தம் மந்திகள் குட்டிகளுடன் மேலும் கீழும், முன்னும் பின்னும், அங்குமிங்கும், ஏறியிரங்கி ஓடியாடி, செல்கின்ற மக்களோடு விளையாடுவதும், அவர்கள் கொண்டு செல்கின்ற பழம் தேங்காய் முதலியவற்றைப் பறித்துத் தின்பதும், கொடாத மக்களின் ஆடைகளைப்பற்றி விடாது மன்றுடுவதும் வியப்பை உண்டாக்கும். மற்றும் குரங்குக் கூட்டங்கள் தம் சுற்றத்துடன் இணைந்தும், அவற்றுடன் விளையாடியிருப்பதும், தம் குட்டிகளைப் பேணுவதும், மக்கட்குப் பல அரிய படிப்பினையைப் புகட்டுவதாகும்.

இனிப் பழநிமலையின் பாதிப் படி வரிசையிலே வேள் ஆவி மரபில் வந்த வையாபுரிக் கோமான் உருவச்சிலை தாங்கிய ஒரு சிறு மண்டபம் விளங்கும். இதற்குமேல் முன்னர் கூறப்பட்ட இடும்பன் கோயிலும் இதற்கடுத்து கிழக்கு நோக்கிய குராவடி வேலவர் கோயிலும், இதற்கு வடகிழக்கில் தெற்கு நோக்கிய புராதனப் புளியமரம் ஒன்றின் அடியிலே விளங்கும் கும்பினி மயில் வேலாயுதசாமி கோயிலும், இதனையடுத்து தண்ணீர்ப் பந்தலும் உள்ளன. இம்மூன்றுவது சந்நிதி கிழக்கு இந்திய கம்பெனியார் காலத்தே (East India Company Days) நாட்டுக் குழப்பத்தினின்றும் வெற்றிபெறவேண்டி முருகபிரானை சிவாகம முறை தெரிந்து தெற்குமுகமாக அமைக்கப்பெற்றதெனவும் கூறுவர்.

இம்மலைக்கு மேற்செல்லும் இக்கற்படி வரிசை ஒன்றன்றி மலையின் தென்பாகத்தில் மற்றொரு கற்படி வரிசையும் உள்ளது. இந்த இரண்டாவது வழியேதான் ஆண்டவருக்கு திருமஞ்சன நீர் வரத்தாற்றினின்றும் கொண்டுவருகின்றனர். இந்த இரு படி வரிசைகளிலும் மலைக்கோயில் அர்த்தசாம பூஜை முடியும் வரை மின்னொளி விளக்குகள் ஒளி வீசிக்கொண்டிருக்கும். முதற்படி வரிசையின் கால் பாகத்தில் சுமார் 42 ஆண்டுகட்கு முன்பு தாசில் குருபாத முதலியார் தனது தாலூகா கிராம சிப்பந்திகளைக்கொண்டு செய்து உதவிய யானைப்பாதை என்ற மலை

வழிப்பாதை ஒன்றும் உளது. மலை உச்சிக்குச் செல்பவர்களிப் படிகள்மீது ஏறிச்செல்ல இயலாதவர்களும், அலுப்பின்றி ஏறிச் செல்ல எண்ணுவோர்களும் மலைவளங் காணக் கருதுபவர்களும் இவ்வானைப்பாதை வழியாக ஏறிச் செல்வர்.

மலையின்மீதுள்ள மின்னொளி விளக்குகளின் வரிசை அருமைப்பாடுடையது. மலையின் வடபாகத்துக் காணும் இவ் விளக்கு வரிசையை அடிவாரத்திலிருந்தோ அல்லது நகரத்திலிருந்தோ காண்போர்க்கு இவ்விளக்கு வரிசை உச்சியிலிருந்து அடிவாரம்வரை ஓர் ஓங்காரத் தமிழெழுத்தாகவும், மலைமீது விளங்கும் இராஜ கோபுரத்தின்மீது எரியும் நீல மின்னொளி விளக்கு அவ் ஓங்காரத்தின் உச்சியில் எழுதப்படுகின்ற மகா மெய்யெழுத்தை யுணர்த்தும் புள்ளியாகவும் யாவும் சேர்ந்து "ஓம்" என்ற உருவக் காட்சியை உணர்த்துவதாகும். இது போலவே மலையின்மீது திருக்கோயிலின் வடக்குத் தெற்குப் பக்கம் வரிசை விளக்குகளை கீழே நகரைப் பார்த்து அடிவாரத்திலிருந்து நகர் முழுதும் போடப்பட்டிருக்கிற விளக்கு வரிசையில் வைத்து நோக்கின் எல்லா விளக்குகளும் சேர்ந்து தன் பெயருக்கேற்ப சிவலிங்கமாகவும், மலைமேலுள்ள மின் விளக்கு வரிசை அச்சிவலிங்கத்தின் மேலிட்ட நட்சத்திரமாலையாகவும் அன்பருள்ளத்தில் இயல்பாகவே அமைந்த இவ்வழகிய தெய்வீகத் தோற்றம் என்றும் மாறுமல் விளங்கிக்கொண்டிருக்கும்.

இங்ஙனம் இக்குன்றின்மீதேறி வடபால் திருச்சுற்று வருங்கால் கீழிருந்து படியேறிவந்த தாபமும் களைப்பும் விரைவில் நீங்கி இன்பெய்துமாறு தென் கீழ்புறத்திலிருந்து தண்ணிய மெல்லிய தென்றல் வீசுதலையும் கீழ்புறம் சென்றுல் இன்னும் நறுங் காற்றும் வீசிக் குளிர்வித்தலையும் அன்பர் உணர்வர். மற்றும் மேலிருந்து காணும் இயற்கைக் காட்சிகள் நம் உள்ளத்திற்கு மென்மேலும் இன்பந் தருவனவாம். மலையின் கீழே எப்புறம் பார்த்தாலும் பசிய கழனிகளும், கரும்பு, வாழைகளும், புஷ்பச் சோலைகளும், தென்னை மா முதலிய தோப்புகளும் எப்பக்கமும் வானளாவிய பெருமிதங் கொண்ட மலைத்தொடர்களும், பசிய பள்ளத்தாக்குகளும், சிற்றுறுகளும், குளங்களும், ஏரிகளும் பல

வாய்த் தோற்றமளிக்கின்றன. மலையின்மீது திருக்கோயில் சுற்றுப் பிரகாரத்தின் நிலப்பரப்பு ஏக்கர் 2, செ. 6 ஆகும்.

## 15. கோவிலின் சிறப்பு.

மலை ஏறும் அன்பர்கள் உச்சியையடைந்து, கல்தள வரிசையிட்ட திருக்கோயிலின் வெளிச்சுற்று மதிலை வலம் வந்து, மேற்குப் பக்கத்தில் சமீபத்தில் (16—9—1943-ல்) உடுமலை, பழநி ஆண்டவர் மில்ஸ் லிமிடெட் உரிமையாளர்களால் எடுப்புவித்த அணி சிகரம் வித்தியாதர மண்டபம் அடைவர். இது 59 அடி நீளமும் 29 அடி அகலமுமாகும். இதனைக் கடந்து மேற்கு நோக்கிய ஆண்டவன் சந்நிதியை அடையு முன்னர் திருக்கோயிலை நோக்கி நிற்கும் மயில் மண்டபத்திலுள்ள சேவலையும், மயிலையும், வேலையும் வணங்கி இறைவன் கோயில் அடைய, மணிக்கட்டி மண்டபத்தில் நுழைந்து திருவாயினுட் சென்று, கட்டைக் கோபுரவாசல் வழியாக இம்மண்டபத்துக்கும் இராஜ கோபுரத்திற்கும் இடையிலே இருமருங்கிலும் பழநி, ஆயக்குடி, நெய்க்காரபட்டி, நாயக்கர் பாளையக்காரர்களால் கட்டிய பெரிய மண்டபங்கள் காணப்படும்.

இடப்பக்கத்திலுள்ள நாயக்கர் மண்டபத்தின் வடபாகத்தே சுப்பிரமணிய விநாயகர் திருத்தளி ஒன்று 1908-ல் நகரத்துத் தனவணிகராலே எடுக்கப்பட்டுள்ளது. அதற்கடுத்து வைசியர் மண்டபத்தின் எதிரே 5 நிலைகளையுடைய இராஜகோபுரம் செங்கற்களாலும், சுண்ணச் சாந்தினாலும் கட்டப்பட்டதாகும். அது 30 அடி அகலமும் 27½ அடி நீளமும் 63 அடி உயரமும் உள்ளது. இப்பழமையான கோபுரம் கால இயல்பில் பழுதாகியதால் 1938-39-ம் ஆண்டில் ரூபாய் 20,000 செலவிலே தேவஸ்தானத்தாரால் புதுப்பிக்கப்பட்டு 1940 ஜூலை 11-வயில் மகா கும்பாபிஷேகமும் சிறப்பாக நடந்தேறியது. இதன்மேலுள்ள சுதைப் பிரதிமங்கள் வேலைப்பாடுடையன. தற்காலத்தான உருவங்கள் பல பார்க்கத்தகுந்தன. இக்கோபுரத்தில் நுழைந்தவுடன் எதிர்நிற்பது பாரவேல் மண்டபமாகும். இதன் அகலம் 31 அடி. நீளம் 60 அடி. 34 கற்றூண்களாலே தாங்கப்பெற்றதாகும். கற்றூண்

களில் பொறித்துள்ள வேலைப்பாடுகள் காணத்தக்கன. அர்ச்சுனன் புருஷா மிருகத்துடன் போராடுவதும், இம் மண்டபத்தை எடுப்பிவித்த பல ஜமீன்தார்களது உருவப்படிமங்களும் கற்றூண்களை அழகுபடுத்துவதைக் காணலாம். இதனை ஒட்டிய மண்டபத்தின் தென் கிழ்க்கோடியிலுள்ள வாத்திய மண்டபத்தின் பகுதியிலே இக்கோயில் அலுவல்நிலையமும், இந்நிலையத்திற்கு நேரே தட்சிணாமூர்த்திக்கும், வடமருங்கிலே மலைக்கொழுந்து சிவனுக்கும், மலைநாச்சியம்மைக்குமாக இரு சிறுதளிகள் உள்ளன. பழநிமலையின் இப்பாகமே அதன் சிகரமென்பர்.

இனி வாத்திய மண்டபத்தை ஒட்டிய திருவாயிலின் வழியாக நவரங்க மண்டபத்தை அடைதல் வேண்டும். இதன் திருவாயிலில் 5½ அடி உயரமுள்ள இரு துவாரபாலகர் காப்புச் செய்கின்றனர். இம்மண்டபத்து நான்கு மூலைகளிலும் மும்மூன்று தூண்களாக அழகுற அமைத்த 12 தூண்கள் இதனைத் தாங்கி நிற்கின்றது. ஆலயத்தின் சிற்பங்கள் சிறப்பான வேலைப்பாடுடையனவல்லவாயினும் இவற்றுட் பெரும்பாலான பிற்கால நாயக்க அரசர்களின் சேனைத் தலைவர்களாகவும், பாளையக்காரர்களாகவும் விளங்கியவர்களின் உருவங்களாகும். இம் மண்டபத்திலேதான் அன்பர்கள் திரளாக இருமருங்கிலும் நின்று ஆண்டவனை வழிபடுவது. இம்மண்டபத்தின் மேற்குப் பகுதியிலே திருவாயிலுக்கருகே கல்மேடைமீது வீரவாகுதேவர் முதலிய நவவீரரும், வேலாயுத விஸ்வநாதரும், நடராஜப்பெருமானும், சிவகாமி அம்மையும், அருணகிரியாரும் தத்தம் திருவுலாத் தோற்றத்துடன் அமைந்துளர். இதற்கடுத்து வடபுரம் பள்ளியறையுளது. அதற்கடுத்து மயில்வாகன ஷண்முக நாதர் சந்நிதியும், அதற்கடுத்த சந்நிதியில் கோயில் விழாக்காலங்களில் எழுந்தருளும் திருமேனியாகிய சின்னக் குமரனும் விளங்குகின்றனர்.

இம்மூர்த்திகளில் ஷண்முகநாதர் திருவுலாப் போதலில்லை. சின்னக்குமரர் மட்டும் கார்த்திகை, சஷ்டி, விசாகம், மாதப் பிறப்பு, அமாவாசை ஆகிய நன்னாட்களில் மலைத் திருச்சுற்றிலே முறையே பொன்மயில் ஊர்தியிலும், வெள்ளி விமானத்திலும்,

திருவுலாப் போந்தருளுகின்றார். சஷ்டியன்று மாத்திரமே சின்னக் குமரர் அடிவாரம் எழுந்தருளி சூரன் வதம் செய்து திருவுலாக் காட்சியளிக்கின்றார்.

இதனையடுத்துக் காண்பது செந்தமிழ் நாட்டு நந்தலில் மாந்தரன்றி ஏனைய பல பிறநாட்டு மக்களின் உள்ளத்தைக் கவரும் சிவகுமாரராகிய திருமுருகப்பெருமான் நின்றுகொண்டு அருள் தரும் நிலையாகிய கருவறையாகும். இப்பெருமானது இணையற்ற வனப்பின்மிக்க திருமுகமும்திருக்கழுத்திற்காணும் அழகியசெஞ்சடைக்குஞ்சியும், அருள்கனிந்ததிருநோக்கமும், புன்னகை தவழும் திருவாயும், மதாணிவிளங்கும் திருமார்பும், ஒல்லிய அரையின்கண் வைத்தருளிய இடக்கரத்தின் செவ்வியும், திருத்தாளிலே மிகமேலாகப் பொலியும் திருத்தண்டைகளின் அழகும் கண்ணாரக் கண்டோரெவரும் பரவசப்பட்டு ஆண்டவனருளிலே திளைத்து ஆடிப்பாடி நிற்றல் காணலாம். இந்த அருட்காட்சி வேறிடங்களில் காணலறிது.

வேற்கரத்திறைவனுக்கு அன்பர்கள் பலவகையான சாத்துப்படிகள் செய்து காணுந்தோறும், ஒவ்வொரு வகையான தெய்வக்கோலமும், ஒவ்வோர் தனிப்பட்ட சாயலும், பேரழகும் மாறிமாறித்தோன்றி விளங்குதல் ஒன்றே அன்பர்கள் தங்களுக்குள் ஓர் உறுதிகொண்டு சஷ்டித்திதிதோறும், கார்த்திகை தோறும், விசாகந்தோறும், திங்கட்கிழமைதோறும் அல்லது செவ்வாய் அல்லது வெள்ளிதோறும் அல்லது அமாவாசை தோறும் முழுமதியம் முதலான பருவகாலங்கள்தோறும் தம் முள்ளத்தில் உறுதிகொண்டு தவறாது திரளாக வருவதற்குக் காரணமாகின்றது. மற்றொரு காரணமும் கூறுவர். ஒரு புலவர் இவ்வரிய அருமைப்பாடுடைய முருகப்பெருமானின் திருமேனி போக முனிவராலே சமைத்து நிறுத்தப்பெற்றதென்பர். இனி உட்புறமுள்ள திருச்சுற்றிலே இடதுபுறமிருந்து வலமாக கோவிலின் ஆதிக்கத்திலுள்ள பல பண்டக அறைகள் உள்ளன. இவற்றினில் அம்மலைக்கோயில் திருமேனிதீண்டும் சிவமறையோரும் பண்டாரங்களும் கோயிற் பணிதாங்கும்போது அமைந்திருப்பர். அவரவர் தம் அபிஷேகப் பொருள்களை வைத்திருக்

கும் இடமும் அதுவே. தென்கிழக்கு மூலையிலே மடைப்பள்ளியும், வடகிழக்குகோயிலில் நவவீரருக்குச் சில உருவங்களும் காணப்படுகின்றன.

## 16. அன்பர்கள் வழிபாடும், அவர் செலுத்தும் திறைப்பொருள்களும்.

அருணகிரிநாதராலே திருப்புகழ் ஓதி வழிபட்ட முருகனது குறிஞ்சிநிலமாகிய வடவேங்கடம் பிற்காலத்தே வைணவத்திருக் கோயிலாக மாற்றப்பட்டதென்பது பல அறிஞரது கருத்தாகும். பண்டுபோன்ற அத்திருப்பதிக்கு எவ்வாறு அளவற்ற அன்பர்கள் சென்று திரும்புகின்றனரோ அதுபோலவே தென்பழநியாகிய இத் திருமலைக்கும் நாற்றிசையினின்றும் வந்து வணங்கித் திருவருள் பெற்றுத் திரும்பும் மக்களும் எண்ணற்றவராவர். இங்கு வரும் அன்பர்கள் எவரும் தங்கள் தங்கள் கோரிக்கைப்படி முடியிறக்குதலும், சர்க்கரை, தேன், பால், தயிர், இளநீர், பன்னீர், கற்பூரம், திருநீறு ஆகிய இவற்றுள் ஒன்றை அவற்றிற்கிசைந்த கலங்களிலே சேமித்துக் காவடியின் இருபுறங்களிலும் கட்டி எடுத்துக்கொண்டு மலையேறுதலும், அப்பொருள்களைக் கதிர்வேற் பெம்மானுக்கு ஆக்குதலும் அவர்கள் புரியும் அன்புச் செயல்களாம். அவற்றுள்ளும் மலைக்கடவுளாகிய முருகனுக்குக் கதலியிலுயர்ந்த விருப்பாக்ஷி மலை வாழைப்பழத்துடனே நறுநெய் கரும்புச்சர்க்கரை, மலைச்செந்தேனும், திராட்சை, பேரீச்சை, கற்கண்டு முதலியனவும் கூட்டிப் பிசைந்தமைத்த பஞ்சாமிர்த நறுங் குழம்பைப் பரமன் திருமுடிமீதிருந்து திருவடிவரையும் சிறப்பாக ஆட்டி வழிபடுகின்றனர். இன்னும் நல்ல கலவைச் சந்தனக் குழம்பு, பசும்பால், செந்தேன், வெண்தயிர், பன்னீர் என்னும் இப்பொருள்களை அன்பர்கள் முருகப்பெருமானுக்கு ஆட்டி அவன் திருவுருவைக் கண்குளிரக் காண்கின்றனர். இவையன்றி கையுறையாயும், காணிக்கையாயும் அன்பர்களால் கொண்டுவந்து சேர்க்கப்படும் பொருள்கள் பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டனவும், காசுகளும், பிறவும் ஆகும். இவற்றோடு திரு ஆபரணங்கள் செய்து வைக்கின்றவர்களும் பலராவர். இப் பொருள்களில் நூதனமாகத் தோன்றும் சிலவற்றை திரட்டி

கோயிலில் சிறிய அளவினதாக கண்காட்சி நிலையம் (Museum) வைத்திருப்பதை அன்பர்கள் காண்பதாகும். இதனைப் பெருக்க, அதற்கான ஒரு இடமும் விரைவில் ஏற்படலாகும்.

பழநி ஆண்டவர் வழிபாடு மற்றொரு சிறப்பையுமுடைய தாகும். இங்கு இந்துக்களேயன்றி முஸ்லீம் சகோதரர்களும், ஆண், பெண், குழந்தைகள் குடும்பத்துடன் வந்து கோயிலின் சந்நிதிக்குப் பின்புறத்தில் சந்தனக் காப்பிட்டு, ஊதுபத்தி தூபம் போட்டு சர்க்கரை "பாத்தியா" ஓதி வணங்கி, தாங்கள் கோரும் வரங்களைப் பெறுகின்றார்கள். சமய ஒற்றுமையினைப் போதிக்கவல்ல ஆண்டவனின் கருணைதான் என்னே!

## 17. திருவிழாக்களும்—நிகழும் காலங்களும்.

பழநி ஆண்டவருக்குத் திருவிழாக் காலங்களாகிய சிறப்பு நாட்கள் ஒவ்வோர் ஆண்டிலும் வைகாசி விசாகத்திலும், ஐப்பசி சஷ்டியிலும், (கார்த்திகை) கிருத்திகையிலும், தைப்பூசத்திலும், பங்குனி உத்திரத்திலும் நடைபெறுகின்றன. இவையன்றி மாதந்தோறும் திருக்கார்த்திகை, விசாகம், சஷ்டி, மாதப்பிறப்பு, அமாவாசை ஆகிய நாட்களிலும் விழாக்கள் நடைபெறும்.

திருமலைமீது வீற்றிருக்கும் மூலஸ்தான மூர்த்திக்கும் திருவாவினன்குடி குழந்தை வேலாயுதருக்கும், அதிகார மூர்த்தியாக நகரத் திருக்கோயிலிலே கொலுவீற்றிருந்தருளும் முத்துக் குமாரசுவாமிக்கும் ஆண்டுச் சிறப்புக்களாகிய வைகாசி விசாகம், தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய பெருவிழாக்களில் திருத் தேர் உலா சிறப்பாக நடைபெறுகின்றன. நகரத் திருக்கோயில் முன்பு ஒரு மரத்தேரும், அடிவாரத்திலே ஒரு மரத்தேருமன்றிப் புதிதாக 76,000 ரூபாய் செலவிலே செய்துள்ள அழகிய சித்திர வேலைப்பாடமைந்த வெள்ளித்தேருமாக மூன்று தேர்கள் இருக்கின்றன. பெருவிழாக்களில் மரத்தேர் வலம் அன்றி, வெள்ளித் தேரில் இறைவன் நகர்வலமாக தைபூசத்தன்றும், ஆடி அமாவாசையன்றும் பங்குனி உத்திரத்தில் மலையைச் சுற்றியும் வந்து காட்சி தந்தருளுவர். தைப்பூச விழா ஊர்க் கோயிலிலும், பங்கு

னித் திருவிழா திருவாவினன்குடிக் கோயில் முன்பாகவும் பத்து நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். பெருந் திரளான பக்தர்கள் வந்து வணங்கிச் செல்வர்.

## 18. கல்வெட்டுக்களும் —சரித்திர வரலாறும்.

பழநிப் பெருமான் வீற்றிருக்கும் கருவறையின் வெளிப் பக்கத்தே வடக்குத் தெற்குச் சுவர்களிலும் வியாழ வரிசை 3 பக்கங்களிலும் 8 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை 14, 15-ம் நூற்றாண்டினராகிய பிற்காலப் பாண்டியர், விஜயநகரத் தரசர்களுடைய கல்வெட்டுகளாகும். இவை அரசாங்கக் கல்வெட்டிலாகாவினராலே படியெடுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. அவற்றால் ஆண்டவருக்குச் சில தேவதானங்களும் அவற்றாலே கட்டளை நடத்திவருவதற்குரிய பொருள் வரவின்வாயில்களும் பிறவும் அறியப்பெறுவன.

பழநித் திருக்கோயிலின் பண்டைய வரலாறு இக் கல்வெட்டுக்களாலும், ஆங்காங்கு கிடைத்துள்ள சிறு குறிப்புக்களாலும், மேற்கூறியபடி போகசித்தர் பிரதிஷ்டை எனவும், அச்சித்தரின் மாணவராகிய புலிப்பாணியாரும், அவருக்குப் பின்னர் அவர் வழி வந்தோரும் பழநிப் பெருமானுக்கு வழித்தொண்டு பூண்டு வருவாராயினர் எனவும் தெரியவருகிறது.

இப்பூசனை நடந்துவரவே இச்சிவகிரி முருகன் பெருமை நாடெங்கணும் பரவலாயிற்று. அக்காலத்துப் பண்டைத் தமிழ் வேந்தரில் ஒருவரும் மலையாள அரசருமாகிய சேரமான் பெருமான் இம்மூர்த்தியின் அளவுகடந்த அருளையும் கவர்ச்சியையும் கேள்வியுற்று இப்பெருமானுக்குக் கருவறையும் நடு மண்டபமும் அழகுற எடுத்து முடித்துத் திருப்பணி செய்தார் என்பர். இச்சேரமானே கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் சைவ சமயாசாரியரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரது தோழர் என்று கூறலாம். அது பழநித்தல புராணத்திலே, "சேரர்கோன் ஆலயத்தில் நின்றிலகு பரஞ்சுடரைச் சிந்தை செய்வோம்" என்பதனாலும் விளங்கும். இத்திருப்பணியே பின்னர் 16-ம் நூற்றாண்டிலே மதுரை

ஆண்ட நாயக்க மன்னர்களையும் பழநி நகரத்திலும் அதனைச் சுற்றி சிற்றூர்களிலும் ஆட்சி செலுத்திவந்த குறுநில மன்னர்களையும் இதுபோன்ற சிவதருமங்களிலே ஈடுபடச் செய்தது. அவற்றுள் சேரர்கோன் திருப்பணி என்பதற்கு அறிகுறியாகக் கருவறையின் வடபக்கத்துக்கு வெளிச் சுவற்றிலே சேர அரசர் குதிரைமீதேறிய வடிவம் செதுக்கப்பட்டுள்ளது. இஃதன்றியும் இம்மலைப்படி தொடக்க வரிசையில் " சேர விநாயகர் " என்று ஒரு விநாயக மூர்த்திக்குப் பெயர் வழங்கப்பட்டுவருவதும், அச் சேரவிநாயகர் கோவிலின் வாசலில் அரச உடையோடு கூடிய ஒரு உருவம் குதிரைமீதமர்ந்து நிற்கும் கோலத்துடன் பொறிக் கப்பட்ட கற்சிலை நாட்டப்பெற்றிருப்பதும் மற்றைய முருகன் திருக்கோயில்கள் போன்றில்லாமல் இங்குமட்டும் சேரநாட்டு மாந்தர்கள் தங்களுக்குப் பரம்பரைப் பேர்க்குடியாக வைத்துக் கொண்டு காவடி, காணிக்கை முதலியன கொண்டுவந்து அன்பும் பிடியும் விடாபல் ஆண் பெண் குழந்தைகளோடு பெருங் குழு வினராக முருகனை வழிபாடு செய்து போவதாலும், சேரநாட் டரசரது இத்திருப்பணியின் உண்மை ஒருவாறு உய்த்துணர இடந்தருகின்றது.

மேற்குறித்த பிற்பட்ட அரசர்கள் ஆண்டவனுக்குரிய அன்றாட வழிபாட்டிற்குரிய பொருள்களுக்காக நன்செய், புன்செய், தோப்பு முதலிய நிலங்களும், அந்நிலத்தின் பாசனத்திற்கென ஏரி முதலிய நிலங்களும், திருநந்தாவிளக்கு, திரு அமுது, வெஞ் சனம், திருமஞ்சனம், திருப்பள்ளித்தாமம் (பூமாலை) முதலிய பொருள்களும் பரிசங்களாக எழுதுவித்தும், இப்பரிசங்களைக் கல்லிலும், செம்பிலும் வெட்டுவித்தும் திருப்பணி புரிந்தனரே யன்றித் திருக்கோயில்களைக் கட்டுவித்தல் முதலிய பெரும் பணிகள் செய்தமை இக்கல்வெட்டுக்களாற் காணப்படவில்லை.

## 19. பழனி ஊர்க்கோயிலும்—நாயக்க மன்னர்களும்.

பழநி நகரின் மேற்குப் பாகத்திலே மிக அழகாக விளங்கு வது பிருஹந்நாயகி அல்லது பெரியநாயகியம்மையாரது கோயிலாகும். இக்கோயிலில் பெரியநாயகியம்மையாரது சந்நிதி வள்ளி

தெய்வானையுடன் முருகப்பெருமான் சந்நிதி கைலாசநாதர் சந்நிதியுமாகிய இம்மூவருடைய திருத்தளிகளும் ஒரே வரிசையிலும் நடுவில் முருகர் அமைய அமைந்திருத்தலின் உண்மை அறிவு, இன்பவடிவினருமாகிய சோமாஸ்கந்தமூர்த்தத்தின் அருள் தத்துவத்தை இந்த ஆலயம் விளக்குகின்றது. ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்நிதி தனிமையாக இவைகளின் தெற்குப் பாகத்தில் அழகிய ஒரு பெருமண்டபத்துடன் விளங்குகின்றது.

இத்திருக்கோயில் 16-ஆம் நூற்றுண்டிலே மதுரை நாயக்க அரசர் காலத்ததாகும். கல்வெட்டுக்கள் யாதும் காணப்படவில்லை. பிற்காலத்தில் பழநி, ஆயக்குடி பாளையக்காரர்களாலும் வெகுவாக நெய்க்காரபட்டி நாயக்கர் குடும்பத்தினராலும் திருப்பணி செய்து, விரிவாய் எடுத்துக் கட்டப்பட்டதாகும். இங்குள்ள மண்டபங்களின் தூண்களிலே இத்திருக்கோயிலைக் கட்டியவரும் சீர்திருத்திப் பெருக்கியவருமாகிய பெரியார் பலருடைய உருவச் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இங்குள்ள நடராஜர் திருத்தளி சமீபகாலத்தில் நகரத்துத் தனவணிகர்களாலே 1907-ஆம் ஆண்டில் எடுக்கப்பட்டதாகும்.

இத்திருக்கோயில் கிழக்குநோக்கியது. திருவாயிற் கோபுர வேலை தென்னிந்தியாவில் பல இடங்களில் அறைகுறையாக விடப்பட்ட இராய கோபுரம்போல இங்கும் மேல் மாடங்களின்றிப் பாதியாக நிற்கின்றது. இக்கோபுரம் விஜயநகரத்தரசர்களுள் ஒருவராலே தொடங்கி எக்காரணத்தாலோ நடுவில் நிறுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகின்றது. இவ்வாயிலுக்கு முன்பாக "**நவரங்க மண்டபம்**" என்னும் அழகிய பகுதி நாடார் குலமக்களாலே அமைக்கப்பட்டிருக்கிறது. இருமருங்கிலும் நிற்கும் தூண்களிலே அழகிய திருவுருவங்களும் திருப்பணி செய்த செல்வர்களின் உருவங்களும் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள்ளே சிவபிரான் ஆடிய ஊர்த்துவத் தாண்டவக் கோலமும், அக்கூத்தினைக் காளி கண்டு அகந்தை ஒழிந்த நடனத்தோற்றமும் எதிரெதிரே அமைக்கப்பட்டுள்ளன. இவையன்றி, நன்கறிந்த அழகிய திருவாயிலில் துவாரபாலகர் உருவங்களும், விநாயகர், தண்டாயுதபாணி திருவுருவங்களும் இம்மண்டபத்தை அணிசெய்கின்றன.

இக்கோயில் கும்பாபிஷேகம், பழநி மக்கள் நினைவுக்கெட்டாத காலத்தில் நிகழ்ந்ததற்குப் பின்னர் அடுத்த முறையாக 1949-ஆம் ஆண்டு செப்டம்பர்மீ 5ம் நாள் சிறப்புடன் நிகழ்ந்தது. இத்தல விருக்ஷம் வில்வமாகும்

## 20. திருவாவினன்குடிக் கோயில்.

திருவாவினன்குடிக் கோயிலே இப் புராதனத்தல (ஆதி)க் கோயிலாகும். இதனையே நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் முருகனின் ஆறுபடை வீடுகளில் மூன்ருவதாகச் சிறப்பித்துள்ளார். இப்படை வீட்டின் சிறப்பு, திருமுருகாற்றுப்படையிலுள்ளது.

திருவாவினன்குடி என்ற பெயர்க்கு காரணங்கள் பல உள. திருமகள், காமதேனு, சூரியன், நிலமகள், அக்னி என்ற ஐவர் தொழுது பேறுபெற்ற தலம் என்பதும் முன்னர் குறித்துள்ளோம். இதற்குச் சான்ருக இக்கோயிலிலே மேற்கூறப்பட்ட ஐவருக்கும் கற்படிமங்கள் கோயிலின் உட்புறம் தென்மேற்குப் பக்கத்தில் கீழ் மேல் வரிசையில் ஒரு மேடையில் நிலை பெறுத்தப்பட்டிருத்தலைக் காணலாம்.

மற்றும் இத்தலத்தை ஆன்ருேர்கள் "**மணிபூரக ஸ்தலம்**" என வகைப்படுத்தியுள்ளனர். உடம்பினுள்ளே மூலாதாரம், லிங்கம், நாபி, இதயம், புருவநடு, சிரசு என்னும் ஆறு இடங்களும் இறைவனைக் காண்பதற்கு வாயில்களாம். அங்ஙனம், அந்த ஆறும், மூலாதாரம் சுவாதிட்டான முதலிய பெயர் பெறும். அங்ஙனம் புறத்தே இறைவனைக் காண்டக்குரிய ஆறு தலங்களுண்டு. அவை முருகப்பெருமானுடைய ஆறுபடை வீடுகள் ஆகும்.

திருவாவினன்குடி சந்நிதியில், முருகப்பெருமான் மயில் மீது அமர்ந்த குழந்தைவேலாயுதசாமி என்ற பெயருடன் விளங்குகின்ருர். காலவரையறைக்கெட்டாத இக்கோயில் சுமார் 30 வருடங்கட்கு முன்னர் காரைக்குடி திரு. நா. மு. லெக்ஷ்மணன்

செட்டியார் அவர்களால் சிற்பமுறையிலே புதுப்பிக்கப்பெற்று 1910-ஞு ஜூன்-மீ 25 ம் நாள் கும்பாபிஷேகமும் நடந்தேறி யுள்ளது. இதன் திருப்பணி பாராட்டத்தக்கதே. ஆனல் பழமை யான இக்கோயிலின் கோபுரமும், முன் மண்டபமும் புதுப்பிக் படாமலே நின்றுள்ளன.

பழநியம்பதியில் ஆங்காங்கு உள்ளவை விநாயகர் கோயில் கள் ஐந்தும், மாரியம்மன் கோயிலும், அங்காளம்மன் கோயிலும், படிப்பாறை காளியம்மன் கோயிலும் இப்பழநியில் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர்களால் எடுப்புவித்த பட்டத்துவிநாயகர் கோயி லும் பிறவுமாகும். திருமாலுக்கு ஊர்க்கடைவீதியில் ஸ்ரீ வேணு கோபாலப்பெருமாள் கோயிலும், மேற்குரதவீதியில் ஸ்ரீ இலக் குமிநாரணப்பெருமாள் கோயிலுமாக இரண்டு உள்ளன.

## 21. பிற கோயில்களும்—விவரங்களும்.

இன்னும் திருவாவினன்குடிக் கோயிலை அடுத்து அங்கிலி பரமமேசுவரருக்கு ஒரு கோயிலும், இதற்குச்சற்று தென்பால் பழநிமலை அடிவாரம் கடைவீதி வரிசையில் கிழக்கு நோக்கி வேளீஸ்வர சுவாமிக்கு மற்ருெரு கோயிலுமுள்ளது.

---

பழநியில் ஆட்சி செலுத்திய ஜமீந்தார் ஒருவருக்கு ஆண் சந்ததி இல்லாது போக, இவ்விநாயகரின் அருளால் உதித்த இள வரசரின் ஞாபகார்த்தமாக இவ்விநாயகர் "பட்டத்து விநாயகர்" என்ற பெயர் பெற்ருர் என்பது.

சிதைவுற்றிருந்த பட்டத்து விநாயகர் கோயிலது திருப்பணி யும் கும்பாபிஷேகமும் முற்றுவித்த அன்பர்கள்; திருவாளர்கள் பழநி ப. கிருஷ்ணசாமி பண்டாரம், சு. பாலராமலிங்கம் செட்டி யார் அ. முத்தையா பிள்ளை முதலியோர் ஆவர்.

இவையன்றி, பழநிக்கு இரண்டு மைல் தொலையிலேயுள தாகிய பாலசமுத்திரம் என்னும் சிற்றூரிலுள்ள அகோபில வரத ராஜப் பெருமாள் கோயில் ஒன்றும் உள்ளது. இக்கோயில் 17-ம் நூற்ருண்டிலே நாயக்கர் வம்சத்தாரால் கட்டப்பட்டிருத்தல்

வேண்டும். இக்கோயிலுக்கு ஆண்டுதோறும் அரசினர் ரூ.654-8-5 மோகினிப் படித்தரம் உதவுகின்றனர். சிதைவுற்றிருந்த இக்கோயில் சமீபத்தில் திருப்பணி செய்யப்பெற்றுள்ளது.

கீரனூர் என்னும் சிற்றூர் கீசகன் வாழ்ந்த இடம் என்பர். இது பழநிக்கு வடக்கே பன்னிரண்டு மைல் தொலையிலுள்ளது. ஷண்முகநதி பாயப்பெறும் பண்புடையது. இங்கு வாகீசுவரப் பெருமானுக்கு கொங்கு சோழர், பிற்காலப் பாண்டியர் காலத்திய தொன்மையான கோயிலுண்டு. கோயில் திருமதில்கள் சிதைவுற்றும், திருத்தளியின் ஒரு பாகம் சமீபத்தில் திருப்பணி செய்யப் பெற்றுமுள்ளது. இக் கோயிலுக்கு பழநி தேவஸ்தானத்திலிருந்து ஒரு சிறிய தொகை அதன் பராமரிப்புக்காகக் கொடுக்கப்பட்டு வருகிறது. இக் கோயிலின் திருமதில்களில் உள்ள பல கல்வெட்டுக்கள் இக் கோயிலுக்கு விடப்பட்ட நிலதானங்களை விளக்கிக் கூறுகின்றன.

## 22. ஆண்டவன் நூல் நிலையம்.

தமிழுணர்ச்சியும், சைவசமய உண்மைகளும் பரப்பும் நோக்கத்தோடு பழநி மலையடிவாரத்திலே பங்குனித்தேர் மண்டபத்தில் சென்ற 1938-ஆம் ஆண்டில் சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தலைவராயிருந்த உயர்திரு. A. கொண்டப்பா அவர்களால் "ஆண்டவன் நூல் நிலயம்" ஒன்று துவங்கி நடந்து வருகின்றது. இந்நிலையத்திலே சங்க நூல்களும், சமயம், ஆராய்ச்சி, சரித்திரம் விஞ்ஞானம், ஆராய்ச்சி நூல்களும், வடமொழி, தெலுங்கு, கன்னடம், ஆங்கில நூல்களுமாக ஏறக்குறைய 1900-புத்தகங்கள் தொகுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. இத்துடன் சமயம், இலக்கியம் சம்மந்தமான வார, மாதாந்திர வெளியீடுகளும் தினத்தாள்களும் வரவழைக்கப்பட்டு இலவச வாசகசாலையும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

பழநி மக்களுக்கும், தரிசனத்திற்காக வந்து செல்லுகின்ற எண்ணற்ற அயலூர் மக்களிற் பலருக்கும், கல்வியும் சமய உணர்ச்சியும், தெளிவும் ஏற்படுவதற்கு இந்நிலையம் ஒரு நிலைக்களமாக விளங்குகின்றது.

## 23. பொறுப்பு.

பழநி தேவஸ்தானத்தைச் சேர்ந்த கோயில்கள் 26-ஆகும். இவை 1846-ஆம் ஆண்டுவரை சென்னை மாகாண அரசியலாரின் ஆளுகையிலிருந்து வந்து, அவ்வாண்டில் ஆயக்குடி ஜமீன்தார் அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது. அதன் பின்னர் பழநிஜமீந்தார் அவர்கள் காரியஸ்தரிடமும், ஆக்ட் 20/1863 சட்டத்தின்கீழ் நிறுவிய தேவஸ்தானக் கமிட்டியாரிடமும், பின்னர் ஆக்ட் 2/1927 அமுலுக்கு வரவே, சென்னை இந்து அறநிலையபாதுகாப்புக் கழகத்தார்களின்—The Madras Hindu Religious Endowments Board ஆட்சியிலும், 1939-முதல் B. O. No. 1262 dated 6—3—1939 உத்திரவுப்படி ஒரு நிர்வாக அதிகாரியின் (Executive Officer) பொறுப்பிலுமிருந்து வருகிறது. இதன்றி போர்டார் அவர்களின் B. O. No. 14719 dated 26—10—1943 உத்திரவுப்படி ஒரு ஆலோசனை சபையார் (Advisory Committee) தேவஸ்தான காரியங்களை கவனித்து வருகின்றனர்.

---

ஆலோசனை சபை அங்கத்தினர்கள்:— திருவாளர்கள்
1. ராவ்பகதூர் ஐ. டி. ஒபுளக்கொண்டம நாயக்கர் ஐயன் அவர்கள், ஜமீன்தார், ஆயக்குடி. 2. திவான்பகதூர், பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள், டிரஸ்டி, பி. எஸ். ஜி. தருமநிலயம் பீளமேடு. 3. வேணுவுடையாக் கவுண்டர் அவர்கள், பட்டக்காரர், சங்கரண்டாம்பாளையம். 4. எம். பி. மங்கள கவுண்டர் அவர்கள், மிராஸ்தார், பழநி. 5. வி. வி. சி. ஆர். முருகேச முதலியார் அவர்கள், ஏஜண்டு மதுரை ஹார்வி மில்ஸ், ஈரோடு. 6. சி. ஆர். சதாசிவ முதலியார் அவர்கள், மானேஜிங் ஏஜண்டு, பங்கஜா மில்ஸ், கோயமுத்தூர். 7. கே. பி. தியாகராஜ தீக்ஷதர் அவர்கள், எம். ஏ., பி. எல்., வழக்கறிஞர், கோயமுத்தூர்.

**பழனி தேவஸ்தான பொறுப்பில் அடங்கிய கோயில்களாவன:-**

திருமலையின்மீது: 1. ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி, 2. மலைக்கொழுந்து சிவன் அம்மன், 3. புவனேஸ்வரி—போகர் சந்நிதிகள், 4. கைலாசநாதர் அம்மன், 5. மலநாச்சிமார், 6. சவுடேஸ்வரர், மலைப்படிகளில் 1. இடும்பன், 2. குராவடிவேலவர்,

3. வையாபுரிதுரை, 4. 18-ஆம்படி கன்னிமார், 5. வள்ளியம்மன், அடிவாரத்தில் 1. திருவாவினன்குடி: குழந்தைவேலாயுத சுவாமி, 2. வேளீசுவரர், 3. அங்கிலி பரமேசுவரர், 4. மீனுச்சி சுந்தரேசுவரர், 5. பாதவிநாயகர்; பழநி ஊர்க்கோயில்கள்: 1. பெரியநாயகியம்மை என்ற பிரஹந்நாயகி, 2. கோசலவிநாயகர், 3. உத்திர விநாயகர், 4. அபரஞ்சிவிநாயகர், 5. லக்ஷிமிநாராயணப் பெருமாள், 6. வேணுகோபாலப் பெருமாள், வையாபுரிக்குளம்: பாதிரிவிநாயகர், ஷண்முகநதிக்கரை: 1. பெரியாவுடையார் என்ற பிரகதீஸ்வரர், 2. தூர்க்காச்சியம்மன், 3. நவக்கிரகங்கள்; இடும்பன் மலை: கலிங்கன்பாறை சுப்பிரமணிய சுவாமி; பாலசமுத்திரம்: அகோபில வரதராஜப்பெருமாள், கீரனூர்: வாகீசுவர சுவாமி.

## திருவாபரணங்கள் முதலியன,

திருவாபரணங்கள் பட்டாடைகள் முதலியன சுமார் ஒன்றரை லக்ஷம் ரூபாய் மதிப்பிடலாகும். வாகனங்களில் சில தங்க மூலாம் பூசியவையும், பல வெள்ளியால் ஆனவையும் உள்ளன. அவைகளுள் சிறப்பானவை தங்க மூலாம் பூசிய குதிரை, மயில் வாகனங்களாகும். இன்னும் பல மர வாகனங்களாகவே உள. இரண்டு மரத்தேர்கள் உள்ளன. இவற்றுள் போற்றத் தகுந்தது 1938-39ல் சுமார் ரூபாய் 77-ஆயிரம் செலவில் செய்துள்ள வெள்ளித்தேர் ஆகும்.

## நந்தவனங்கள்,

திருவாவினன்குடி, தெப்பக்குளம், நாகம நாயக்கர்குளம், நாகபட்டிணத்தோட்டம், மின்சார விடுதி, இராக்கால மடம் முதலிய இடங்களிலிருந்து ஆண்டவனுக்கும், தேவஸ்தானக் கோயில்களுக்கும் பூக்கள் பூஜைக்கு வருவன.

## பக்தர்கள் திருப்பணி.

### மலைப்படி வசந்த மண்டபங்கள்:

வெயிற்காலங்களிலும், மழைக்காலங்களிலும், மலை ஏறிச்

செல்லும் பக்தர்கள் தங்குவதற்கும் சிறிது களை தீர்த்துக்கொள்வதற்கும் ஏற்கனவே மூன்று மண்டபங்கள் திருவாளர்கள், மதுரை புளியடி அ. பா. குப்புசாமி அய்யர் ஒன்றும், மாயவரம் சேலக்கரை அருணசல உபாத்தியாயர் ஒன்றும், ஈரோடு வி.வி.சி.ஆர். முருகேச முதலியார் அவர்கள் ஒன்றும், ஆக மூன்று மண்டபங்களை பூர்த்தி செய்து இருக்கின்றார்கள்.

## மற்றும் அதியற்புத மண்டபங்கள்.

சென்ற சிலவருஷங்களுக்குள் திருவாளர்கள்: பீளமேடு திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு, சென்னை ராவ்பகதூர் சி. திருவேங்கட முதலியார், கோவை, சுண்டைக்காய்முத்தூர் கே. ஏ. பி. பழநிச்சாமி செட்டியார், பொள்ளாச்சி சமத்தூர் பாளையக்காரர், கோவை டி.எஸ். சிவசுப்பிரமணியம் செட்டியார், சென்னை திவான்பகதூர், ஹைக்கோர்ட் நீதிபதி, சி. என். குப்புசாமி அய்யர், கோவை, தி. அ. இராமலிங்கம் செட்டியார், பொள்ளாச்சி, பிலிச்சின்னம்பாளையம், ப. கிருஷ்ணசாமி நாடார், பீளமேடு, பி. எஸ். ஜி. கங்கா நாயுடு, கோவை, சு. கணபதி அய்யர் முதலோராகிய பல பெரியோர்கள் கூடி இன்னும் அநேக மண்டபங்கள் கட்டி முடித்திருக்கிறார்கள்.

16-9-1943-ல் உடுமலைப்பேட்டை பழநி ஆண்டவர் மில்ஸ் லிமிடெட் உரிமையாளர்கள் ஆண்டவனது மலைமீது 60-அடி நீளமும், 29-அடி அகலமும் உள்ளதுமான வித்தியாதர மண்டபம் ஒன்று கட்டி முடித்து மிகச்சிறப்பாக திறப்பு விழா நடந்தேறியது. மலைக்கோவிலில் நடைபெறும் சமயச் சொற்பொழிவுகளும் இசைக் கச்சேரிகளும் இங்குதான் நடைபெறுகிறது.

## மற்றும் பணிகள்.

இன்னும் நீலகிரி, கேத்தை, திரு. கே. ரங்கே கவுடர் அவர்களால் ஏற்கனவே 1940-ல் அடிவாரத்தில் கட்டியுள்ள மடாலயம் தவிர, மலைமீது மின்சார கடிகாரம் தாங்கிய அழகிற் சிறந்த மணிமண்டபம் ஒன்றும் எடுப்புவித்து, 21—3—1942-ல் பிரதிட்டை செய்துள்ளனர்.

மலைப்படிகள் ஏறிச்செல்லும் பக்த யாத்ரீகர்களுக்கு குடி தண்ணீர் மிக்க அவசியம் எனக்கருதி, திருவாளர்கள் மதுரை புளியடி அ. பா. குப்புசாமி அய்யர் அவர்களால் இரண்டு குழாய்களும், திருப்பாதிரிப்புலியூர், ஞானியார் சுவாமிகள் ஞாபகார்த்தமாக பேரூர் தேவஸ்தானம் டிரஸ்டி, வே. ஆறுமுகம் பிள்ளை அவர்களால் ஒரு குழாயும் இதுவரை வைக்கப்பட்டுள்ளன.

வெயிற்காலங்களில் பக்தர்கள் களைதீர்த்துக்கொள்வதற்காக தக்க கல் பெஞ்சுகள் தளவரிசையுள்பட சென்னை, அ. திருப்பதி நாயுடு, கோவை, சி. அய்யண்ணா கவுண்டர், அ. ரங்கே கவுடர், ஈரோடு வி. வி. சி. ஆர். முருகேச முதலியர்ர் முதலிய பெரியோர்களால் அழகு சிறக்கச் செய்யப்பட்டுள்ளன. இவர்கள் யாவருக்கும் ஞானபண்டிதனுடைய அருட்பெருங் கிருபாகடாக்ஷம் உண்டாவதாக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

## பதினெண் சித்தர்கள் ஐக்கியமான இடங்கள்.

| | | |
|---|---|---|
| 1. | ராமதேவர் — | அழகர்மலை |
| 2. | திருமூவர் — | சிதம்பரம் |
| 3. | கும்பமுனி — | அனந்தசயனம் |
| 4. | வால்மீக முனி — | எட்டிகுடி |
| 5. | இடைக்காட்டார் — | திருவண்ணமலை |
| 6. | தன்வந்திரி — | வைதீஸ்வரன்கோயில் |
| 7. | மச்சமுனி — | திருப்பரங்குன்றம் |
| 8. | கமலமுனி — | திருவாரூர் |
| 9. | போகர் — | பழநிமலை |
| 10. | கொங்கணர் — | திருப்பதி |
| 11. | நந்திசர் — | காசி |
| 12. | பதஞ்சலி — | சேது |
| 13. | கோரக்கர் — | பேரூர் |
| 14. | சட்டமுனி — | ஸ்ரீரங்கம் |
| 15. | பாம்பாட்டிசித்தர் — | விருத்தாசலம் |
| 16. | குதம்பைசித்தர் — | மாயவரம் |
| 17. | கருவூரர் — | கருவூர் |
| 18. | சுந்தரர் — | மதுரை |

## பக்தர்கள் திருக்கோயிலுக்குச் செல்லும்போது அரியாமையினுல் செய்துவரும் அனுச்சாரங்கள்.

1. ஸ்நானம் செய்யாது போகுதல்
2. துவைத்து உலர்த்தாத வேஷ்டி தரித்துக்கொண்டு போகுதல்
3. தலையில் வஸ்திரம் தரித்துக்கொண்டு போகுதல்
4. வீட்டிலும் வெளியிலும் சண்டையிட்டுக்கொண்டு போகுதல்
5. மேல் வேஷ்டி போட்டுக்கொண்டும் போர்த்திக்கொண்டும் போகுதல்
6. உடுப்புகள் மாட்டிக்கொண்டும் குடை பிடித்துக்கொண்டும் போகுதல்
7. பாதரக்ஷையை இட்டுக்கொண்டு போகுதல்
8. வெற்றிலை பாக்கு போட்டுக்கொண்டு ஆலயங்களிலும் திரு வீதிகளிலும் படிக்கட்டுகளிலும் எச்சல் துப்புதலும்
9. ஆலயங்களில் மலஜலங்கழித்தல், மூக்குச்சிந்தி அசிங்கப் படுத்துதலும்
10. சிவனடியார்களை வெறுத்துப் பேசுதலும்
11. அனுவசியமான வீண் வார்த்தைகள் பேசிக்கொண்டு போகுதலும்
12. காமப்பற்று வைத்துப் போகுதலும்
13. ஆலயங்களில் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து இருப்பதும், படுத்து உறங்குவதும்
14. சுவாமியின் பலிபீடத்திற்கும் குறுக்கே போவதும் இடையிலே காலை நீட்டி நமஸ்காரம் பண்ணுவதும்
15. சுவாமி விக்ரஹத்தை தொடுதலும் கூடாது

ஷை குற்றங்களைச் செய்தவர்களை நரஹத்திலே தண்டிக்கப்படுமென்று அநேக ஆகம புராணங்கள் எடுத்துக் கூறுகின்றன

குளிக்கப்போய் சேறு பூசிக்கொள்வதுபோல சுவாமி தேரிசனமாகிய புண்ணியத்திற்குப்போய் பாவத்தை தேடிக்கொள்ளாது பக்தர்கள் மனப்பூர்வமாக கிரமப்படி சுவாமியை தெரிசனம் செய்து சுகக்ஷேமத்துடன் வாழ்ந்து வரும்படி வேண்டுகிறோம்.

N. K. M ஷரீப், பழநி.

*ஸ்ரீ ராதாகிருஷ்ண விலாஸ் பவர் பிரஸ், பழனி.*

## நித்ய கன்ம அனுஷ்டான விதி.

**சைவ மரபில்** பிறந்தவர்கள் யாவரும் ஏழாமாண்டிலாவது ஒன்பதாமாண்டிலாவது சமய தீட்சைபெற்று அநுட்டான விதிகளைச் செவ்வையாகக் கைப்பற்றி விடாது நடத்தல்வேண்டும்.

நாடோறுஞ் சூரியோதயத்திற்கு ஐந்து நாழிகைக்கு முன்னுவது, இரண்டரை நாழிகைக்கு முன்னுவது, நித்திரைவிட்டெழுந்து புறத்தேபோய் மலஜலங்கழித்து, செளசம்பண்ணி உட்கார்ந்து தந்த காஷ்டத்தினல் தந்தசுத்திசெய்து முகங்கழுவி, **சிவசிவ** என்று மூன்றுதரம் ஜெபித்து நெற்றியில் விபூதி தரித்துக்கொள்ளவேண்டும்.

விபூதியை நெற்றியில் பொட்டாகவும், சதுரமாகவும், சூலமாகவும் தரிக்கவே கூடாது. நன்ருய் வேகாத விபூதியும், வெந்து கரிந்த விபூதியும் சிவந்த விபூதியும் தரிப்பதாகாதென்பது விதி.

### விபூதி வாங்கும் விதி.

வாகனத்தின்மீதிருந்தும், பல்லக்குமீதிருந்தும், ஆசனத்தின் மீதிருந்தும், வெளியிலிருந்தும், திண்ணையிலிருந்தும் விபூதி கொடுப்பவர் கீழ் நின்று கொடுக்கில் மேனின்று வாங்கிடினும், லக்ஷியமில்லாமல் ஒரு கை அல்லது மூன்று விரலினல் வாங்கிடினும், தம்பலம் தின்றுகொண்டு வாங்கிடினும், நடக்கின்றபோது வாங்கிடினும், அசுத்தமானவிடங்களினின்று வாங்கித் தரித்திடினும் இரௌரவாதி நரகம் தங்களுக்குச் சொந்த வீடெனத் தீர்மானிக்கவேண்டும்.

### விபூதி தரிக்கும் விதி.

அதி பக்தியோடு **சிவசிவ** என்று சிவ நாமத்தை மூன்று முறை உச்சரித்துத் திருநீற்றை அன்புடன் கையாலெடுத்துப் பூமியின்மீது விழாவண்ணம் அண்ணுந்து செவியோடு செவிவரையில் புயமீது ஒழுகும்படி நெற்றியிலழுந்தத் தினம் பிரதி தினம் மூன்று விரல்களால் தரிப்பவர்கட்கு முற்பிறப்பிற் செய்த வினைகள் சாயைப்போல் தொடர்ந்திருக்கினும் யாவையும் நீக்கி பரிசுத்த தேகமாக்கிப் பரமன் சத்தியோடு நித்தமும் நீங்காமல் முகத்தில் திருநடனம்புரிந்து எவ்வித சஞ்சலமும் வாராமற் காத்துக் கடைசியில் பரகதிக்கு ஆளாக்குவர். இது சரதம், சரதம், சரதம்.

## இப்புத்தகத்தில் அடங்கியுள்ள விஷயங்கள்.

1. பக்த ஜனங்கள் கவனிக்கவேண்டிய விஷயம்.
2. பழநி ஸ்தலச் சிறப்பு.
3. பழநி என்ற நாமதேயம் ஏற்பட்ட வரலாறு.
4. சிவகிரி என்ற பழநி மலையும், சத்திகிரி என்கின்ற இடும்பன் மலையும் பழநிக்கு வந்த வரலாறு.
5. போகர் தண்டபாணி விக்ரஹம் செய்து பூஜித்த வரலாறு.
6. ஆண்டவருக்கு தினசரி நடக்கும் ஆறுகால பூஜைகள் வரலாறு.
7. பழநியாண்டவருக்கு பக்த ஜனங்களால் கொண்டுவந்து செலுத்தப்ப காவடிகள் வரலாறு.
8. புண்ணிய தீர்த்தங்கள் 6 இடங்கள் வரலாறு.
9. கிரிப்பிரகாரத்தினால் பக்தர்கள் அடையும் புண்ணியம்.
10. பழநிஸ்தலத்திற்கு வரும் சோதனைக் காவடிகள் வரலாறு.
11. 12 மாதங்களின் உற்சவ வரலாறு.
12. பக்தர்கள் தங்கிச் செல்ல தர்மச் சத்திரங்கள் வரலாறு.
13. கிரிப்பிரகாரத்தில் உள்ள காக்ஷிகள் வரலாறு.
14. மலைப்படிகளிலுள்ள காக்ஷிகளும், கோவிலின் சிறப்பும்.
15. பழநி டவுனிலுள்ள காக்ஷிகள் வரலாறு.

இத்துடன் முருகக்கடவுளுக்குறிய ஆறுபடை வீடுகளின் வரலாறு சேர்க்கப்பட்டிருக்கிறது.

SUBJECT

**பக்தர்கள் குறைத்துக் கேட்க இயலாது.**

**வெளியூர் வாசிகள் அணு 0—10—0 தபால் ஸ்டாம்பு அனுப்பி 1புஸ்தகம் பெற்றுக்கொள்ளலாம். வியாபாரிக தக்க கமிஷன் கொடுக்கப்படும்.**

**N. K. M. ஷரீப்,**

**புத்தகம் & படம் வியாபாரம்,**

அடிவாரம், பழ

ஸ்ரீ ராதாகிருஷ்ண விலாஸ் பிரஸ், பெ ன்ரோடு, பழனி.